# ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம்

ஜூன் – 1980
ஆனி

விலை
ரூ. 1-20



ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம் ACC·NO. 38701.

தொகுதி—60 | ஜுன் 1980 | இதழ்—6

## பொருளடக்கம்

## திருமலை திருப்பதி தேவஸ்தானம், திருப்பதி
## ஸ்ரீ வேங்கடேசப் பெருமாள் ஊஞ்சல் சேவை

ஸ்ரீ வேங்கடேசப் பெருமாள் எல்லாக் குணங்களையும் அவஸ்தை களையும் கடந்து விளங்குகிறார். அவர் அவற்றால் பாதிக்கப்படவில்லை; அவைகள் அவரைப் பாதிக்கவும் முடியாது. ஆனால், பக்தர்கள் அந்த ஒப்பற்ற பரம்பொருளைத் தங்கள் உள்ளத்திலேயே உணர்ந்து அனுபவிக் கிறார்கள். ஆகையால் பக்தர்கள், ஸ்ரீவேங்கடேசப் பெருமாள் எப்போதும் உற்சாகமாகவும் சந்தோஷமாகவும் கவலையற்றும் இருந்து, தங்களுக்கு எல்லாவிதமான சௌகரியங்களையும் சௌபாக்கியங்களையும் க்ஷேமங் களையும் கொடுத்துக்கொண்டிருக்க வேண்டுமென்று விரும்புகிறார்கள்.

இதுதான் திருமலையில் கண்ணுடிஹால் எனப்படும் அயன மஹாலில் நாள்தோறும் நடத்தப்படும் ஊஞ்சல் சேவையின் தாத்பரிய மாகும். இந்தச் சேவை ஒவ்வொரு நாளும் மாலையில் ஆறு மணிக்குப் பிறகு நடந்து வருகிறது. உற்சவ மூர்த்தி அழகாக அலங்கரிக்கப் பெற்ற ஊஞ்சலில் தம் தேவிமார்களுடன் எழுந்தருளுகிறார். கந்தம், சாமர உபசாரங்கள், வேதபாராயணம், பஜனை ஆகியவற்றுடன் ஸ்வாமி லேசாக ஊஞ்சல் ஆடுகிறார்.

மேற்கண்ட ஊஞ்சல் சேவை உற்சவத்தில் பங்குகொள்ள விரும்பும் கிருகஸ்தர்கள் ரூ. 1000 செலுத்தித் தங்கள் குடும்பத்தில் ஆறு பேர்களுடன் இந்த உற்சவத்தில் கலந்துகொள்ளலாம். அவ்விதம் உற்சவத்தில் பங்குகொள்ளும் கிருகஸ்தருக்கு ரூ. 250 பெறுமானமுள்ள தங்க டாலரும் வஸ்திர வெகுமதியும் அளிக்கப்படும்.

**எக்ஸிக்யுட்டிவ் ஆபீசர்,**
**திருமலை திருப்பதி தேவஸ்தானம், திருப்பதி**



# ஸ்ரீராமகிருஷ்ண விஜயம்

ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்
நன்றே நினைமின் நமன் இல்லை

—திருமூலர்


| தொகுதி 60 | ரௌத்திரி ஹூ ஆனி மீ | இதழ் 6 |
| --- | --- | --- |





विश्वनाथः कृपासिन्धुरानन्दवनमन्दिरः ।
पायान्नः पार्वती कान्तः प्रपन्नार्तिहरो हरः ॥

விச்வநாத: க்ருபாஸிந்துரானந்தவனமந்திர: ।
பாயாந் ந: பார்வதிகாந்த: ப்ரபந்நார்த்திஹரோ ஹர: ॥

கருணைக் கடலும், அடியார்களின் துன்பத்தைப் போக்குகிறவரும், ஆனந்த வனத்தில் வாழ்பவரும் பார்வதீகாந்தனுமாகிய (காசி) விச்வநாதர் நம்மைக் காப்பாராக.

அருமறையின் சிரப்பொருளாய்; விண்ணவர், மா
முனிவர், சித்தர் ஆதி ஆனோர்
தெரிவரிய பூரணமாய்க், காரணம், கற்
பனை கடந்த செல்வம் ஆகிக்;
கருதரிய மலரின்மணம், எள்ளில் எண்ணெய்,
உடல் உயிர்போல் கலந்து, எந் நாளும்
துரியநடு ஊடுஇருந்த பெரியபொருள்
யாது? அதனைத் தொழுதல் செய்வாம்.

— தாயுமானவர்

# ஸ்ரீ ராமகிருஷ்ணரின் அருள் வாக்கு

ஞாயிறு, மார்ச் 1, 1885

ஸ்ரீ ராமகிருஷ்ணர்: என்னவென்று சொல்வேன்? பெரும்பாலும் எல்லா மக்களுமே உளுந்து, துவரை போன்ற சாதாரணப் பண்டங்களையே வாங்கும் வாடிக்கைக்காரர்களாக இருப்பதை நான் பார்க்கிறேன். பெண், பொன் ஆசைகளை விட்டுவிட ஒருவரும் விரும்புவதில்லை. பெண்களின் அழகைக் கண்டும் பணத்திற்குள்ள செல்வாக்கைக் கண்டும் மக்கள் மயங்கி இறைவனை மறந்துவிடுகிறார்கள். ஆனால் இறைவனின் தரிசனம் பெற்றவனுக்கோ படைப்புக் கடவுளின் பிரம்மபதவியுங்கூட சிறு துரும்பு போன்று பொருளற்றதாகவே தோன்றுகிறது.

ஒருவன் இராவணனைப் பார்த்து, ''நீ சீதையை அடையும் பொருட்டுப் பலவேறு உருவங்களை எடுத்துக்கொண்டு சீதையிடம் போய்க் கொண்டிருக்கிறாய். அதற்குப் பதிலாக நீ ஏன் இராமபிரானின் உருவத்தை எடுத்துக்கொண்டு சீதையிடம் போகக்கூடாது?'' என்று கேட்டான். இராவணன் அதற்கு, ''இராமபிரானின் உருவத்தை என் இதயத்தில் தியானிக்க ஆரம்பித்த மாத்திரத்திலேயே ரம்பை, திலோத்தமை போன்ற தேவலோகத்தைச் சேர்ந்த மிகப் பெரிய அழகிகள்கூடச் சுடுகாட்டில் உள்ள சாம்பலுக்குச் சமமாக என் மனதிற்குத் தோன்றுகிறார்கள். அந்த நிலையில் பிரம்மபதவியே அற்ப தூசு போன்று எனக்கு ஆகிவிடுகிறது. அப்படி இருக்கும்போது மற்றொருவனின் மனைவியைப் பற்றிய சிந்தனை அப்போது எனக்கு எப்படித் தோன்றும்?'' என்று பதில் கூறினான்.

எல்லா மக்களும் மிகவும் அற்பமான பொருள்களை வாங்கும் வாடிக்கைக்காரர்களாகவே இருக்கிறார்கள். இதயம் பரிசுத்தமாக இல்லாவிட்டால் பகவானிடம் உண்மையான பக்தி ஏற்படுவதில்லை; மனமும் இஷ்டதெய்வத்தைப் பற்றிய சிந்தனையில் ஒருமுகப்பட்டு உறுதியாக இருப்பதில்லை. அந்த நிலையில் மனம் நாலாதிசைகளிலும் பலவற்றைப் பின்பற்றி அலைபாய்கிறது.

(*மனமோகனிடம்) நீ என்னைக் கோபித்துக் கொண்டாலும் சரி, அல்லது மனதிற்குள்ளாக ஏதாவது நினைத்துக்கொண்டாலும் சரி; நான் இராக்காலிடம், ''பகவானை அடையவில்லையே என்ற அருள்தாகம் காரணமாக நீ கங்கையில் குதித்து உயிரை மாய்த்துக்கொண்டாய் என்று நான் கேள்விப்பட நேர்ந்தாலும் பரவாயில்லை; ஆனால் நீ ஒருவனுக்குக் கீழே உத்தியோகம் ஏற்றுக்கொண்டு அவனுக்கு அடிமையாக வேலை பார்க்கிறாய் என்பதை மட்டும் ஒருகாலும் என்னால் சகித்துக்கொள்ள முடியாது'' என்று கூறினேன்.

* ஸ்ரீ குருதேவரின் இல்லறச் சீடர்களில் ஒருவர் மனமோகன். அவரது சகோதரிக்கும் இராக்காலுக்கும் திருமணம் ஆகியிருந்தது.

ஒரு சமயம் நேபாளத்தைச்சேர்ந்த ஒரு பெண் இங்கு வந்திருந்தாள். அவள் எஸ்ராஜ் என்ற வாத்தியக்கருவியுடன் பக்திப்பாடல்களைப் பாடினாள்; ஹரிநாம பஜனை செய்தாள். யாரோ ஒருவர் அவளிடம், ''உங்களுக்குத் திருமணம் ஆகிவிட்டதா?'' என்று விசாரித்தார். அதற்கு அவள் கோபத்துடன், ''நீங்கள் என்ன பேசுகிறீர்கள்? நான் இறைவனுக்கே அடிமை பூண்டவள்! அப்படி இருக்கும்போது நான் வேறு யாரை வரிப்பேன்?'' என்று பதில் கூறினாள்.

பெண், பொன் ஆகியவற்றின் மத்தியில் வாழ்ந்துகொண்டு ஒருவன் எப்படிக் கடவுளை அடைய முடியும்? அப்படிப்பட்டவன் பற்றற்றவனாக இருப்பது மிகவும் கடினம். முதலாவதாக, அவன் தன் மனைவிக்கு அடிமையாக இருக்கிறான்; இரண்டாவதாக, அவன் பணத்திற்கு அடிமையாக இருக்கிறான்; மூன்றாவதாக, அவன் தான் வேலை செய்யும் எஜமானனுக்கு அடிமைப்பட்டிருக்கிறான். அந்த எஜமானனிடம் அவன் உழைக்க வேண்டியிருக்கிறது.

அக்பர் தில்லிக்கு அரசராக இருந்தபோது தில்லிக்கு அருகில் இருந்த ஒரு காட்டில் முஸ்லிம் துறவி ஒருவர் தமது குடிலில் வசித்து வந்தார். அந்தச் சாதுவைப் பார்ப்பதற்காக மக்கள் பலர் அவரது குடிலுக்குப் போவது வழக்கம். ஒரு சமயம் அந்தச் சாதுவுக்குத் தம்மைக் காண வரும் அன்பர்களைத் தகுந்த முறையில் நன்கு உபசரிக்க வேண்டும் என்ற ஆவல் தோன்றியது. ஆனால், பணம் இல்லாத நிலையில் அவரால் எப்படி விருந்தினர்களை உபசரிக்க முடியும்? ஆகவே அவர், அக்பர் சக்கரவர்த்தியிடம் சென்று பண உதவி பெற்று வருவது என்று முடிவு செய்தார். அவர் அவ்விதம் நினைத்ததற்குக் காரணம், அக்பர் சக்கரவர்த்தி தமது அரண்மனைக்குச் சாதுக்கள் யார் வேண்டுமானாலும் எப்பொழுது வேண்டுமானாலும் தாராளமாக வரலாம் என்ற நிலையை ஏற்படுத்தியிருந்தார். அந்தத் துறவி அக்பரைக் காணச்சென்ற சமயத்தில், அக்பர் தமது தொழுகையறையில் ஆண்டவனைத் தொழுவதில் ஈடுபட்டிருந்தார். ஆகவே துறவி அக்பரிடம் அவரது தொழுகை முடிந்த பிறகு பேசலாம் என்ற எண்ணத்தில், அந்த அறையில் சென்று அமர்ந்தார். அக்பர் தமது தொழுகையின் முடிவில், ''ஹே பகவானே! எனக்குப் பணம் கொடு; எனக்கு செல்வங்களைக் கொடு'' என்றெல்லாம் இதுபோன்ற பலவற்றை ஆண்டவனிடம் கேட்டுப் பிரார்த்தித்தார். அக்பரின் இத்தகைய பிரார்த்தனைகள் துறவியின் காதில் விழுந்ததும், அவர் உடனே எழுந்து அந்தத் தொழுகையறையிலிருந்து வெளியே செல்ல முற்பட்டார். ஆனால், துறவி வெளியே செல்ல முற்படுவதைக் கண்ட அக்பர், சைகை செய்து சாதுவைச் சற்று நேரம் அமரும்படி கேட்டுக் கொண்டார். பிறகு தொழுகை முடிந்ததும் அக்பர் சாதுவிடம், ''தாங்கள் என்னைச் சந்தித்துப் பேசும் நோக்கத்துடன் முதலில் வந்து உட்கார்ந்தீர்கள். பிறகு ஏன் என்னிடம் ஒன்றும் பேசாமலேயே புறப்பட்டுச் செல்ல முற்பட்டீர்கள்?'' என்று வினவினார்.

துறவி அதற்குப் பதிலாக, ''சக்கரவர்த்தி அவர்களே! காரணத்தைத் தாங்கள் தெரிந்து கொள்ள வேண்டிய அவசியம் இல்லை; நான் போய் வருகிறேன்'' என்றார். ஆனால் அக்பர் துறவியிடம் காரணத்தைச் சொல்லும்படி பலமுறை வற்புறுத்திக் கேட்டார். அக்பர் பலமுறை வற்புறுத்திக் கேட்ட பிறகு துறவி கடைசியாக, ''என் குடிலுக்குப் பல அன்பர்கள் வருகிறார்கள். அவர்களை உபசரிப்பதற்குத் தங்களிடம் சிறிது பணம் பெற்றுப்போகலாம் என்று வந்தேன்'' என்று தெரிவித்தார். அவர் சொன்னதைக் கேட்ட அக்பர், ''அப்படியானால் தாங்கள் அதைப்பற்றி என்னிடம் ஒன்றும் பேசாமலே ஏன் புறப்பட்டீர்கள்?'' என்று விசாரித்தார்.

அதற்குத் துறவி; ''தாங்கள் தொழுகையின் போது ஆண்டவனிடம் 'எனக்குப் பணம் கொடு, செல்வங்களைக் கொடு' என்று பிச்சைக் கேட்டுப் பிரார்த்திப்பதைப் பார்த்தேன். அப்போது தாங்களுங்கூட ஒரு பிச்சைக்காரர்தாம் என்பதை அறிந்தேன். அதன்பிறகு என் மனதில், 'இவரே ஒரு பிச்சைக்காரர். இந்தப் பிச்சைக்

காரரிடம் நான் ஏன் பிச்சை கேட்க வேண்டும்? பிச்சை கேட்பதானால் நான் ஆண்டவனிடமே பிச்சை கேட்டுக்கொள்கிறேன்' என்ற எண்ணம் தோன்றியது. ஆகவே நான் தங்களிடம் வந்த காரணத்தைத் தெரிவிக்காமலே புறப்பட முற்பட்டேன்'' என்று பதில் கூறினர்.

நரேந்திரர்: இப்போதெல்லாம் கிரீஷ் ஆத்மிக விஷயங்களைப் பற்றியே சிந்திக்கிறார். அதைத் தவிர வேறு எந்தவிதமான சிந்தனையும் அவருக்கு இல்லை.

ஸ்ரீராமகிருஷ்ணர்: அது மிகவும் நல்லது. ஆனால் அவன் ஏன் வாயில் வந்தபடியெல்லாம் கன்னா பின்னா என்று என்னைத் திட்டுகிறான்? இப்போதுள்ள என் மனநிலையில் இது போன்ற முரட்டுத்தனமான வார்த்தைகளை என்னால் சகித்துக்கொள்ள முடிவதில்லை. ஓர் வீட்டின் அருகில் இடி விழுந்தால், அந்த வீட்டிலுள்ள கனமான பொருட்கள் அவ்வளவாக ஆட்டம் கொடுப்பதில்லை. ஆனால் அந்த வீட்டின் ஜன்னல்களும் கதவுகளும் பலமாக ஆட்டம் கொடுக்கின்றன. என்னால் கிரீஷ் பேசுவதைப் போன்ற முரட்டுத்தனமான வார்த்தைகளை இப்போதெல்லாம் சகித்துக்கொள்ள முடிவதில்லை. சத்துவ குணத்தில் நிலைபெற்று அதிலேயே வாழ்ந்து கொண்டிருக்கும் ஒருவனால் சப்தம், ஆரவாரங்கள் போன்றவற்றைத் தாங்கிக் கொள்ள இயலாது. இதே காரணத்தினால்தான் ஹ்ருதய் என்னை விட்டுப் போகும் நிலை ஏற்பட்டது. ஜகன்மாதாதான் அவனை இங்கிருந்து வெளியே போகும்படி செய்தாள். அவன் இங்கு இருந்த கடைசிக் காலத்தில் அவனுடைய போக்கு மிகவும் வெறுக்கத் தக்கதாக ஆகிவிட்டது. அவன் முரட்டுத்தனமாக என்னைக் கோபித்துக்கொள்வான், திட்டுவான், உரக்கச் சப்தம் போட்டு கத்துவான். இப்படி அவன் என்னிடம் நடந்துகொண்ட முறை ஓர் அளவில்லாமல் எல்லைமீறிப் போயிற்று. (நரேந்திரரிடம்) என்னைப்பற்றி கிரீஷ் கொண்டிருக்கும் கருத்துக்களை எல்லாம் நீ ஒப்புக் கொள்கிறாயா?

நரேந்திரர்: தங்களைக் கடவுளின் அவதாரம் என்று தாம் நம்புவதாக, கிரீஷ் என்னிடம் கூறினர். நான் அதற்குப் பதில் ஒன்றும் சொல்லவில்லை.

ஸ்ரீராமகிருஷ்ணர்: அவனுடைய நம்பிக்கை தான் எவ்வளவு ஆழமானது! நீயே அதைப் பார்த்தாய் அல்லவா?

குருதேவர் பேசாமல் மௌனமாக நரேந்திரரை சில நிமிடங்கள் வரை அன்பு ததும்பப் பார்த்துக்கொண்டிருந்தார். சிறிது நேரத்திற்குப் பிறகு அவர் நரேந்திரரிடம், ''குழந்தாய், பெண், பொன் ஆகியவற்றைத் துறந்தால் அல்லாமல் நீ கடவுளை அடைய முடியாது'' என்றார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (மகிமாசரணிடம்): முன்னேறிச் செல்! மேலும் மேலும் முன்னேறிச் செல்! அவ்விதம் செய்தால் சந்தனக்கட்டைகள் உனக்குக் கிடைக்கும்; அதையும் கடந்து முன்னேறிச் செல்! வெள்ளிச்சுரங்கம் உனக்குக் கிடைக்கும்; அதையும் கடந்து முன்னேறிப் போ! தங்கச்சுரங்கம் கிடைக்கும்; அதோடு நின்றுவிடாமல் மேலும் நீ முன்னேறிச் செல்ல வேண்டும்! அப்போது வைரம், மாணிக்கம் ஆகியவற்றை நீ பெறுவாய். ஆகவே மேலும் மேலும் முன்னேறிச் சென்றுகொண்டே இரு என்று நான் சொல்கிறேன்.

மகிமாசரண்: ஆனால் ஐயனே! ஏதோ ஒன்று பின்னால் இருந்து என்னை இழுத்துப் பிடிக்கிறது. அது என்னை முன்னேக்கி நகர விடாமல் தடுக்கிறதே!

ஸ்ரீராமகிருஷ்ணர் (புன்சிரிப்புடன்): ஏன் அப்படி? உன்னை அவ்விதம் முன்னேக்கி நகர விடாமல் தடுக்கும் பாசக்கயிறுகளை அறுத்து எறிந்துவிடு. இறைவனின் திருநாம மகிமை என்ற வாளைக்கொண்டு அந்தப் பாசக்கயிறுகளை துண்டித்து எறிந்துவிடு. ஜகன்மாதாவின் திருநாமம் என்ற வாள் காலனின் பாசக்கயிறுகளை அறுத்துவிடும். ★




## காசி தோன்றிய வரலாறு

முக்கண் கொண்டு மூவுலகையும் ஆளும் உமாபதியான சங்கரர் கைலாய மலையிலோ மந்தராசல மலையிலோ அல்லது காசியிலோ தமது விருப்பப்படி வசித்து வந்தார்.

ஒரு சமயம் சிவபெருமான் பார்வதிதேவியுடன் காசியில் ஓர் இடத்தில் வீற்றிருந்தபோது திடீரென்று தேவி சங்கரரிடம், ''சுவாமி! மிகவும் புண்ணியம் நிறைந்த இந்தக் காசியம்பதி எவ்வாறு தோன்றியது?'' என்று கேட்டார். உமையம்மையின் அந்தக் கேள்விக்குப் பதிலாகச் சிவபெருமான் கூறிய கதை ஸ்காந்த புராணத்தில் இடம் பெற்றுள்ளது. சிவபெருமான் கூறுவதாக அமைந்த அந்தக் கதை வருமாறு:-

''பிரளயம் எனப்படும் ஊழிக்காலத்தில் சகல விதமான சிருஷ்டிகளும் அழிந்துவிடுகின்றன. எங்கு பார்த்தாலும் ஒரே இருள்மயமாகக் காணப்படும். சூரியன், சந்திரன், நட்சத்திரங்கள், கிரகங்கள் ஆகிய எவையும் அப்போது இருப்பதில்லை. ஆனால் ஈடு இணையற்ற சுய ஒளியையுடைய பரப்பிரம்மம் மட்டும் இருக்கும். கல்பகாலத் துவக்கத்தில் எண்ணிப் பார்க்கவும் இயலாத காரணத்தினால் அந்தப் பிரம்மம் சகுணப் பிரம்மமாக ஆகிறது. உலகைப் படைக்கும் வல்லமையுடைய 'சிருஷ்டிபீஜம்' எனப்படும் அந்தப் பிரம்மத்திற்குள் ஆசையின் தோற்றம் ஏற்படும். ''நான் ஒருவனே, இரண்டாக ஆகிவிடுவேன்'' என்பது முதல் ஆசை. இதிலிருந்து அந்த உருவமற்ற பிரம்மத்திற்கு உருவம் உண்டாகிறது. இதனால் எல்லாவித மான செல்வச்சிறப்பு நிறைந்த இந்த என்னுடைய திருவுருவம் வெளிப்படும்.

''என்னிடமிருந்து உண்டாகும் தண்ணீர்* உலகம் முழுவதும் பரவிவிடும். இந்தப் பிரபஞ்சத்தைப் படைப்பவனும், பிரபஞ்சத்திலுள்ள பொருள்களுக்குச் சாட்சிரூபமாக விளங்குபவனும், எல்லோராலும் வணங்கப்படுபவனும், எல்லாவற்றிற்கும் மூலகாரணமாக விளங்குபவனும் நான்தான்.

''நான் என்னையே இரண்டு உருவங்களில் வெளிப்படுத்தினேன். அதன்படி இரண்டாவது உருவமாக இயற்கையின் குணமுடைய மாயையை உண்டாக்கினேன். அது நீதான். நீதான் புத்தி தத்துவத்தின் தாய். உன்னோடு கூடவே வெளிப்படுத்தப்பட்ட இடம்தான் இந்தக் காசி க்ஷேத்திரம். நான் காலனின் வடிவெடுத்தக் காரணத்தினால் நாட்டின் படைப்பும் தேவைப்பட்டது. அவ்விதம் ஏற்படுத்தப்பட்ட முதல் நகரம் வாராணசிதான். நீண்ட நாள் வரை நான் உன்னோடு இந்த ஐந்து கோச விஸ்தீர்ணமுடைய பிரதேசத்தில் என் இஷ்டப்படி சஞ்சரித்துக்கொண்டிருந்தேன். நான் மிகவும் மகிழ்ச்சியுடன் அலைந்து திரிந்த இந்தப் பகுதிக்கு 'ஆனந்த வனம்' என்ற பெயர் ஏற்பட்டது.

''இந்த மகேசுவரர் கல்பத்தின் துவக்கத்தில் தமது உடலின் வலப்பக்கம் தமது பார்வையைச்

---

* இங்கே 'தண்ணீர்' என்பது இறைவனின் திருவருள் அல்லது கருணையைக் குறிப்பிடுகிறது போலும்.

செலுத்த, அந்தக் கணமே அவருடைய உடலிலிருந்து கருமை நிறைந்த நீலவண்ணமுடைய பீதாம்பரதாரியும், கமலக்கண்ணனுமாகிய திருமால் நான்கு புஜங்களுடன் தோன்றினர். எல்லாப் புருஷர்களையும்விடச் சிறந்து விளங்கிய காரணத்தினல் அவர் புருஷோத்தமர் எனப் பட்டார்.

"திருமால் சிவனைப் போற்றித் துதித்தார். அதனல் மகிழ்ச்சியடைந்த சிவபெருமான், 'மகாவிஷ்ணு! உன் மூச்சிலிருந்து வேதங்கள் தோன்றும். நீ சர்வக்ஞன்' என்று அவருக்கு வரமளித்தார்.

"அந்த இடத்தில் விஷ்ணு பகவான் தமது சக்கரத்தினல் ஒரு புஷ்கரணியை உண்டாக்கினர். அதைத் தமது வேர்வை ஜலத்தினல் நிரப்பினர். அதன் கரையில் அமர்ந்து கொண்டு தவம் செய்யத் துவங்கினர். அவருடைய தவத்தினல் மகிழ்ந்த சிவபெருமான் அவருக்கு அருகில் எழுந்தருளினர். அப்போது அந்த இடத்தில் அவரது காதிலிருந்து மணிகள் நிறைந்த குண்டலம் பூமியில் விழுந்தது. அது காரணமாக அந்த இடம் 'மணிகர்ணிகை' என்று வழங்கப்பட்டது.

"இதனைக் கண்டதும் நாராயணன், 'பிரபோ, தங்களுடைய மணிகள் நிறைந்த குண்டலம் விழுந்த காரணத்தினல் இந்த க்ஷேத்திரம் முக்தியை அளிப்பதாகுக!' என்ருர். மேலும் சிவபெருமானிடம் அவர், 'தேவதேவா, தங்களுடைய வர்ணிக்க இயலாத சிவமயமான ஜோதி என்றென்றும் இங்கே பிரகாசிக்கட்டும். இதனல் அந்த இடம் 'காசி' என்று அழைக்கப்படட்டும். இந்த க்ஷேத்திரத்தில் மரணமடையும் எல்லாப் பிராணிகளும் கர்ம ஞான பேதமின்றி மோட்சத்தை அடையட்டும்' என்று வேண்டினர்.

"'அவ்வாறே ஆகுக!' என்று சிவபெருமானும் ஆசீர்வதித்தார். உடனே அவர் நாராயணனிடம், 'நீ இப்போது படைப்புக் கடவுளைச் சிருஷ்டி செய். அவர் படைப்புத் தொழிலைத் துவங்கட்டும். இந்த ஐந்து கோச விஸ்தீர்ணமுடைய காசி க்ஷேத்திரம் எனக்கு மிகவும் பிரியமானது. இங்கு என்னுடைய ஆணை மட்டும்தான் நடக்கும். சிருஷ்டி ஏற்பட்டபோதிலுங்கூட இங்கு காலம், கர்மம், யமன் என்ற யாருடைய ஆளுகையும் இருக்காது' என்று கூறினர்."

எப்போது பூமி தோன்றியதோ அப்போது பகவான் சங்கரர் பாரதபூமியின் இதயத்தைப் போன்ற இந்த முக்தி க்ஷேத்திரத்தை அமைத்தார். இவ்விதம் க்ஷேத்திரங்களிலேயே முதன்மை ஸ்தானத்தை வகிக்கும் மகாக்ஷேத்திரமாகிய காசி தோன்றியுள்ளது.

தவம் செய்வது என்பது வேதத்தை ஓதுவதுதான். —தைத்திரியாரண்யகம்

இருபத்தைந்து வயது வரை கற்றுக்கொள்ள வேண்டும். நாற்பது வயது வரை விஷயங்களைத் துருவி ஆராய வேண்டும். அறுபது வயது வரை பிறருக்குக் கற்றுக் கொடுத்துப் பின்பு தெய்வச் சிந்தனையில் ஈடுபட வேண்டும். ஓர் அறிஞர்

பூஜையில் ஆடம்பரம் கூடாது. மனம் ஈடுபட்டுச் செய்ய வேண்டும். சிவராத்திரியன்று அர்ஜுனனும் பீமனும் சிவபூஜை செய்தார்கள். அர்ஜுனன் படாடோபமாகச் செய்தான். பீமனே தூங்குவது போலிருந்து சிவத்தியானம் செய்துகொண்டு, மானசிகமாக உலகிலுள்ள மலர்கள், வில்வதளங்கள் எல்லாவற்றையும் அர்ப்பணம் செய்தான். மறுநாள் அர்ஜுனனைக் கிருஷ்ணபகவான் கைலாசத்துக்கு அழைத்துச் சென்ருர். அங்கு நூற்றுக்கணக்கான படர்கள் கூடை கூடையாக நிர்மால்ய வில்வதளங்களையும் பலவித மலர்களையும் விஸர்ஜனம் செய்து கொண்டிருந்தார்கள். அர்ஜுனனுக்கு வியப்பு உண்டாயிற்று. பீமனின் மானசிக பூஜையைப் பகவான் மனமார ஏற்றுக்கொண்டார். ஸ்ரீ சிருங்கேரி ஜகத்குரு



# விவேகானந்த அஞ்சலி

சிலம்புச்செல்வர் ம. பொ. சிவஞானம்

வாழையடி வாழையாக இந்த நாட்டிலே ஞானிகளின் பரம்பரை வந்துகொண்டிருக்கிறது. இதை எந்த அந்நிய ஏகாதிபத்தியத்தினுலும் தடுத்து நிறுத்த முடியவில்லை. இந்த உண்மையை இஸ்லாமியரின் ஆட்சிக் காலத்திலும் வெள்ளையரின் ஆட்சிக் காலத்திலும் பார்க்கிறோம். வெள்ளையரின் ஆட்சிக் காலத்தில் பாரதமாதாவின் இரு கண்களாக ஸ்ரீ ராமகிருஷ்ணரும் விவேகானந்தரும் அவதரித்து இந்த மண்ணிற்குப் புனிதம் சேர்த்திருக்கிறார்கள்.

இந்துக்களைத் தாழ்வாக நினைத்த மேலைநாட்டிற்குச் சென்று, அந்த மேலை நாட்டினரின் மொழியிலே, அவர்கள் பாணியிலே, ''இதோ, இதுதான் எங்கள் இந்து மதம்'' என்று அவர்களுக்குப் புரியவைத்தவர் விவேகானந்தர்; அப்படி அவர் புரியவைத்தது, நம்முடைய மக்களின் கண்களையும் திறக்க வைப்பதாக அமைந்தது. அந்தப் பணியை விவேகானந்தர் தாம் செய்தார்; அவரால்தான் அதைச் செய்ய முடியும். அவருக்கு முன்பும் அவர் ஆற்றியது போல அத்தகைய பணியை எவரும் ஆற்றியதில்லை; அவருக்குப் பின்பும் விவேகானந்தர் ஆற்றிய அளவுக்கு எவரும் ஆற்றவில்லை. 'விவேகானந்தர் தமது வேதாந்தச் சொற்பொழிவுகளால் இந்துமதத்திற்குப் பெருமை சேர்த்தார்' என்று ஹிந்துக்களின் இதயத்தில் இடம்பெற்ற விவேகானந்தரின் வடிவம், விவேகானந்தருக்குப் பிறகும் வேறு எவராலும் ஆக்கிரமிக்கப்படாமல் விவேகானந்தருடையதாகவேதான் இருந்து கொண்டிருக்கிறது. அவ்விதம் அவர் மேலைநாட்டிற்குச் சென்றபோது அதற்குத் தமிழ்நாட்டைச் சேர்ந்தவர்கள்தாம் முன்னின்று ஏற்பாடுகளைச் செய்தார்கள். நாம் வாழும் இந்த மயிலாப்பூர் வழியாகத்தான் விவேகானந்தர் சென்ருர் என்பது நமக்குப் பெருமை தரக்கூடியதாக இருக்கிறது.

நான் சிறிய பையனுக இருந்தபோது எனது தாய்மாமன் ஒருவர் பெரம்பூரில் இருந்தார். அவர் ஸ்ரீ ராமகிருஷ்ணரிடமும் விவேகானந்தரிடமும் ஆழ்ந்த பக்தி கொண்டவர். அதோடு இந்த மயிலாப்பூர் மடத்தின் நெருங்கிய பக்தராகவும் தொண்டராகவும் அவர் இருந்தார். அவரிடமிருந்துதான் சிறுபையனுக இருந்த நான் முதன்முதலாக ஸ்ரீ ராமகிருஷ்ணரைப் பற்றியும் விவேகானந்தரைப்பற்றியும் தெரிந்து கொண்டேன்.

சுவாமி விவேகானந்தரின் புகழ்பெற்ற நூல்களாக நான்கு யோகங்கள் இருப்பது உங்களுக்குத் தெரியும். ஞானயோகம், ராஜயோகம், கர்மயோகம், பக்தியோகம் ஆகிய விவேகானந்தரின் நான்கு யோகங்களையும், சுதந்திரப் போராட்டத்தின்போது சிறையில் இருந்தபோது நான் ஒழுங்காகவும் முறையாகவும் அமைதியாகவும் இருந்து படித்தேன். தற்கால மனிதனுக்கு எத்தகைய மதம் இருக்க வேண்டும் என்று நான் கருதுகிறேனே, அந்த எனது கருத்து விவேகானந்தரின் நூல்களிலிருந்து நான் பெற்றதே ஆகும்.'

வடக்கிலிருந்து பிரம்மசமாஜம், ஆரிய சமாஜம், ஸ்ரீ ராமகிருஷ்ண சங்கம் ஆகிய

மூன்றும் தமிழ்நாட்டிற்கு வந்தன. இன்று மூன்று சங்கங்களில் தமிழக மக்களின் உள்ளங்களில் அதிக அளவில் இடம் பெற்றிருப்பது ஸ்ரீ ராமகிருஷ்ண சங்கமே ஆகும். மற்ற இரண்டு இயக்கங்களையும்விட ஸ்ரீ ராமகிருஷ்ண சங்கத்தினர்தாம் தமிழ் மக்களுக்கு அதிக அளவில் பயன்பட்டிருக்கிருர்கள்; தொண்டுபுரிந்திருக்கிருர்கள். மற்ற இரண்டு இயக்கங்களை விட ஸ்ரீ ராமகிருஷ்ண சங்கத்தினர்தாம் பல அருமையான ஆன்மிக இலக்கியங்களைத் தமிழ் நாட்டுக்கு வழங்கியிருக்கிருர்கள். பல வேதாந்த நூல்களையும் ஸ்தோத்திரங்களையும் தமிழில் மொழிபெயர்த்துத் தந்திருக்கிருர்கள். சைவ வைணவப் பூசலுக்கு இடமின்றி, 'ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம்' என்ற மாதப் பத்திரிகையையும் ஸ்ரீ ராமகிருஷ்ணரின் கோட்பாட்டிற்கிணங்கத் தமிழில் வெளியிட்டு வருகிருர்கள். இந்த வகையில் ஆரிய, பிரம்ம சமாஜத்தவர்களைவிடத் தமிழுக்குத் தொண்டு செய்தவர்களாக ஸ்ரீ ராமகிருஷ்ண சங்கத்தினர் இருப்பதை நாம் பார்க்கிறேம்.

நரேந்திரராக இருந்த விவேகானந்தர், ''தாங்கள் கடவுளைக் கண்டதுண்டா?'' என்று பரமஹம்சரை அணுகி வினவிய நிகழ்ச்சியை நாம் படித்திருக்கிறேம். இப்போதும்கூடத் தமிழ்நாட்டில் சிலர் இந்தக் கேள்வியைக் கேட்கிருர்கள். 'கடவுளே கிடையாது!' என்று தாங்களாகவே முடிவு கட்டிக்கொண்டு இப்படிக் கேட்பது வேறு; கடவுள் இருப்பதைப்பற்றிய உண்மையைத் தெரிந்துகொள்ள வேண்டும் என்ற உண்மையான ஆவலால் உந்தப்பட்டு கேட்பது வேறு. பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ணரிடம், கடோபநிஷத்தில் வரும் நசிகேதனைப் போல, உண்மையைத் தெரிந்துகொள்ள வேண்டும் என்ற ஆவலால்தான் நரேந்திரர் ஆரம்பத்தில் அந்தக் கேள்வியைக் கேட்டார். முடிவில், தாம் எங்கெங்கோ தேடிய கடவுள் ஸ்ரீ ராமகிருஷ்ணர்தாம் என்ற உண்மை பட்டப் பகல் வெளிச்சம் போன்று அவருக்குப் புலப்பட்டுவிட்டது.

'எம்மதமும் சம்மதம்' என்று வடலூர் வள்ளலார் குறிப்பிட்டார். அவர் பிறந்த இதே மண்ணிற் 'மதமே கூடாது' என்று பேசுகிற பேதைகளும் இப்போது இருக்கிருர்கள். 'மதத்தையே இல்லாமல் செய்துவிட வேண்டும்' என்று பேசுவது, 'மனித இனத்தையே இல்லாமல் பூண்டோடு அழித்துவிட வேண்டும்' என்று சொல்வது போல் இருக்கிறது.

ஞானயோகம், ராஜயோகம், கர்மயோகம், பக்தியோகம் போன்றவற்றைச் சாதாரண மனிதனுல் புரிந்துகொள்ள முடியாது என்ற பிரமிப்பைப் போக்கிய பெருந்தகை விவேகானந்தர்.

அமெரிக்க நாட்டில் விவேகானந்தர் அமரத்துவம் வாய்ந்த பல வேதாந்தச் சொற்பொழிவுகளை நிகழ்த்தியுள்ளார் அவற்றுள் அவரது முதல் சொற்பொழிவாக அமைந்த சிகாகோ சர்வசமயப் பேரவை மாநாட்டில், ''சகோதரிகளே, சகோதரர்களே!'' என்று கூறித் தமது உரையைத் துவக்கினுர். ''சகோதரிகளே!'' என்று தாய்க்குலத்தை முதலில் குறிப்பிட்டு, இந்துக்களின் மனப்பான்மையையும் இந்தியாவின் சிறப்பையும் உணர்த்தியுள்ளார்.

''உண்மையான மதம் கொடுமையானதல்ல; அது அன்புமயமானது, சகோதரத்துவத்தை வளர்ப்பது'' என்பதை விவேகானந்தரின் வாழ்க்கையில் நாம் மிகவும் தெளிவாகக் காண்கிறேம். பிறகு, ''மதத்தின் பெயரால் பூசல்கள் விளைவானேன்?'' என்று கேட்டால், ''மதம் கொடுமையானதல்ல. மதப்பிரசாரகர்கள்தாம் கொடுமையாக இருந்திருக்கிருர்கள்'' என்பதே அதற்கு உரிய பதிலாகும்.

ஜெர்மனி, பிரான்ஸ், பிரிட்டன் ஆகிய நாட்டு மக்கள் மதத்தாலும் நாகரிகத்தாலும் வேறுபட்டவர்கள் அல்ல. மதத்தாலும் நாகரிகத்தாலும் ஒன்றுபட்டிருந்தாலும் உலகில் இரண்டு மகாயுத்தங்கள் தோன்றுவதற்கு அவர்களேதாம் காரணமாக இருந்தார்கள்.

ஆனுல், உண்மையான மதம் மக்களிடையே ஒருமைப்பாட்டை உருவாக்குவதாகத்தான் இருக்க முடியும் என்பதை ஸ்ரீ ராமகிருஷ்ணர், சுவாமி விவேகானந்தர் ஆகியோரின் வாழ்வும்

வாக்கும் நமக்குத் தெளிவாக உணர்த்தியுள்ளன.

மொழி மக்களை ஒன்றுசேர்க்கிறது; மொழி மக்களைப் பிரித்து வைக்கிறது என்று நான் சொல்ல மாட்டேன். நாலுகோடி தமிழர்களையும் தமிழ்தான் ஒன்று சேர்க்கிறது. அது போல் இந்தியா முழுவதிலுமுள்ள மக்களை ஒன்று சேர்க்கும் சக்தியாக இந்துமதம் விளங்குகிறது. இந்திய மக்களாகிய நம்மிடையே பல வேறுபாடுகள் இருந்தாலும் நம் எல்லோரையும் பிணைத்து ஒன்றுபட வைக்கும் சக்தி மதத்திற்குத்தான் உண்டு.

''மனிதகுலத்தின் முன்னேற்றத்திற்குத் தூண்டுகோலாக இருக்கும் பல சக்திகள் சதா காலமும் வேலை செய்து வருகின்றன. அவற்றுள் மிகவும் சக்தி வாய்ந்ததாக இருப்பது மதமாகும். பண்டைக்காலத்தில் இருந்ததைப் போன்று இக்காலத்திலும் மக்களிடையே மதத்திற்கு ஆதிக்கம் உண்டு. மக்களிடையே ஒற்றுமையை வளர்ப்பதற்கு மதம் உதவி செய்திருப்பதைப் போல வேறு எந்த இயக்கமும் இதுவரையில் உதவி செய்ததில்லை. ஒரே நாட்டில் வசிப்பவர்கள், ஒரே இனத்தைச் சேர்ந்தவர்கள், ஒரே குடும்பத்தைச் சேர்ந்தவர்கள் ஆகிய இவை போன்றவை உண்டுபண்ணும் ஒற்றுமையைவிட மிகவும் பலத்த ஒற்றுமையை மதப்பற்றுனது மக்களிடையில் உண்டுபண்ணியிருப்பதை நாம் கண்கூடாகப் பார்த்து வருகிறோம். ஒரே குலம் அல்லது ஒரே கோத்திரத்தைச் சேர்ந்தவருக்கிடையிலோ அல்லது சொந்தச் சகோதரருக்கிடையிலோ உண்டாகிற ஒற்றுமையைவிட ஒரே தெய்வத்தை வணங்குபவருக்கிடையில் உள்ள ஒற்றுமை உயர்ந்தது ஆகிறது. ஒரே மதத்தைச் சேர்ந்தவர் ஒருவருக்கு ஒருவர் உறுணையாக இருக்கிறார்கள்'' என்று சுவாமி விவேகானந்தர் தமது 'ஞானயோகம்' என்ற நூலின் ஆரம்பத்திலேயே குறிப்பிட்டிருக்கிறார். எனவே இந்துமதம்தான் இந்துக்களை ஒன்று சேர்க்கும் பாலமாகும்.

கப்பலோட்டிய தமிழன் என்ற சிறப்புக்கு உரியவர் வ. உ. சிதம்பரம் பிள்ளை அவர்கள். அவருடைய அத்தை ஸ்ரீ ராமகிருஷ்ண மடத்தின் பக்தையாக இருந்தார். இளைஞராக இருந்தபோது வ.உ.சி. தமது அத்தையுடன் இங்கு இதே மயிலை ஸ்ரீ ராமகிருஷ்ண மடத்திற்கு வந்து, அப்போது இங்கே தலைவராக இருந்த சுவாமி இராமகிருஷ்ணானந்தரைச் சந்தித்து உரையாடினார். அந்த உரையாடல்தான் பொதுவாழ்க்கையில் தம்மை ஈடுபடவைத்தது என்று வ. உ. சி. தமது சுயசரிதையில் குறிப்பிட்டுள்ளார்.*

வ. உ. சி. மட்டுமல்ல; இந்திய சுதந்திரப் போராட்டத்தில் பங்கு கொண்ட பல தேசிய வீரர்கள் உருவாவதற்கு, விவேகானந்தர் அன்று இடி போன்று முழங்கிய தேச பக்திக் கருத்துக்கள்தாம் அடித்தளம் அமைத்துத் தந்திருக்கின்றன.

''கையில் கலப்பை பிடித்த உழவர்களின் குடிசைகளிலிருந்து புதிய இந்தியாஎழும்பட்டும்! மீனவர்கள், சக்கிலியர்கள், தோட்டிகள் ஆகியவர்களின் குடிசைகளிலிருந்து புதிய இந்தியா எழட்டும்! பலசரக்குக் கடைகள், பலகாரக் கடைகளிலிருந்தும் புதிய இந்தியா தோன்றட்டும்! தொழிற்சாலைகள், கடைவீதிகள், சந்தைகள் ஆகியவற்றிலிருந்தெல்லாம் புதிய இந்தியா எழுந்து வெளிவரட்டும்!'' என்றும், ''தேச முன்னேற்றம் என்னும் சக்கரத்தை நகர்த்துவதற்கு உங்கள் தோள்களைக் கொடுங்கள்'' என்றும் சுவாமி விவேகானந்தர் கொழும்பு முதல் அல்மோரா வரை நிகழ்த்திய சொற்பொழிவுகளில் இந்திய மக்களுக்கு அறைகூவல் விடுத்தார்.

---

* 1977 மார்ச் ஸ்ரீ ராமகிருஷ்ண விஜய இதழில் 'ஸ்ரீ ராமகிருஷ்ண இயக்கமும் வ. உ. சியும்' என்ற தலைப்பில் வெளியான கட்டுரையில், வ. உ. சி. ஸ்ரீ ராமகிருஷ்ண மடத்தின் பெரியோர்களுடன் கொண்டிருந்த தொடர்பபற்றி விரிவாகத் தரப்பட்டிருக்கிறது.



# நினைத்ததைப் பெறும் வழி

வாகீசகலாநிதி கி. வா. ஜகந்நாதன்

நம்முடைய மனத்தில் எத்தனையோ ஆசைகள் எழுகின்றன. செல்வம் வேண்டும்; வளமான பொருள்கள் வேண்டும்; அவற்றை அனுபவிக்கும் இன்பம் வேண்டும் என்றெல்லாம் ஆசைகள் தோன்றுகின்றன. அந்த ஆசைகளுக்கு அளவுண்டா? '' ஆசைக்கு ஓர் அளவில்லை '' என்று தாயுமானவர் சொல்லி விளக்குகிறாரே. 'அகிலமெல்லாம் கட்டி ஆளினும்' அந்த ஆசை அடங்குகிறதா 'கடல் மீதிலும் நம் ஆணை செல்ல வேண்டும்' என்ற ஆசை எழுகிறது. குபேரனைப் போலப் பொற்குவியலை ஒருவர் படைத்திருக்கிறார்; அவருக்கும் பொருளாசை இருப்பதில்லையா? யாராவது சாமியார் இரசவாதம் செய்கிறார் என்று கேள்விப்பட்டால் அவரை நாடித் தேடி ஓடுகிறார். நீண்ட காலமாக வாழ்ந்து முதுமையை அடைந்தவர்கள், 'இந்த வாழ்க்கை இனிப் போதும்' என்ற எண்ணம் கொள்கிறார்களா? யாராவது வைத்தியர் சாயம் நிலையாக நிற்க ஒரு மருந்தைக் கண்டுபிடித்திருக்கிறார் என்று கற்பனையாக ஒரு செய்தி வந்தாலும் அந்தக் காயகற்பத்தைத் தேடிச்சென்று, அது கிடைக்காமல் நெஞ்சு புண்ணுவார்கள்.

இவ்வாறு ஆசைகள் விரிந்துகொண்டே போகின்றன. இவற்றையெல்லாம் நிறைவேற்றிக்கொள்ள முடியுமா? முடியும் என்று யாராவது சொன்னால் நாம் சும்மா இருப்போமா? அவரிடம் சென்று அடிபணிந்து கெஞ்சிக் கூத்தாடி அந்த இரகசியத்தைத் தெரிந்து கொள்ள முயல்வோம்; இது மனித இயல்பு.

காரைக்கால் அம்மையார் எண்ணியவற்றையெல்லாம் பெறமுடியும் என்று சொல்கிறார். வேறு யாருக்கோ சொல்லாமல் தம் நெஞ்சை நோக்கியே சொல்கிறார். ''உள்ளமே!'' என்று விளித்துச் சொல்கிறார். உள்ளத்தின் உள்ளே கருத்து இருக்கிறது; இது வேண்டும் அது வேண்டும் என்ற எண்ணம் இருக்கிறது. அந்த உள்ளத்தை வேறாக வைத்துப் பேசுவதைப் போலச் சொல்கிறார் அம்மையார்.

'உள்ளமே, உனக்கும் கருத்து இருக்கிறது. அது வேண்டும் இது வேண்டும் என்று ஆசைப் படும் பகுதி அது. அந்தக் கருத்தில் நீ என்ன என்னவோ வேண்டும் என்று ஆசைப்படுகிறாய். அவ்வாறு நீ எதைக் கருதினாலும் அதை உடனே பெற்று அதை அனுபவிக்கலாம்' என்று தொடங்குகிறார். குழந்தைக்கு ஆசை காட்டுவது போல இருக்கிறது அது.

> கருத்தினால் நீகருதிற்று எல்லாம் உடனே
> திருத்தலாம்.

'இதை ஏதோ கவனக்குறைவாக, போகிற போக்கில் சொல்லி வைப்பதாக எண்ணாதே! நான் திண்ணமாக, உறுதியாகவே சொன்னேன்' என்கிறார் அம்மையார்.

> கிக்கென நான் சொன்னேன்.

உள்ளத்துக்கு இப்போது ஆசை எழுகிறது. கருதினவற்றையெல்லாம் பெற்று அனுபவிக்கலாம் என்றால் அதற்கு உரிய வழியைத் தெரிந்துகொள்ள ஆருக்குத்தான் ஆசை உண்டாகாது? ''என்ன செய்ய வேண்டும்?'' என்று அது கேட்கிறது.

காரைக்காலம்மையார் அதற்கு உரிய தந்திரத்தைச் சொல்லப் புகுகிறார்.

''சிவபெருமானை உனக்குத் தெரியுமா? பெரிய அலைகளை வீசி வெள்ளமாக வந்த கங்கைநீரைத் தலையில் தாங்கிக்கொண்டவன்

அவன். எவ்வளவோ காலமாகக் கங்கைநீர் தன் மூதாதையர் என்பின் மேல் பாய வேண்டும் என்று எண்ணித் தவம் புரிந்த பகீரதனின் விருப்பத்தை யாரும் நிறைவேற்ற முன்வர வில்லை. கடைசியில் சிவபெருமானே வெள்ள மாக இரைந்து வந்த கங்கையைத் தன் சடா பாரத்தில் ஏற்று, அங்கிருந்து பகீதரனுடைய மூதாதையர் என்பின்மீது பாயச் செய்தான். யாராலும் நிறைவேற்ற முடியாமல் இருந்த பகீரதனுடைய ஆசையைச் சிவபெருமான் நிறைவேற்றினன்.

பருத்தரங்க வெள்ளநீர் ஏற்றான்.

உள்ளம் கேட்கிறது, ''நான் என்ன செய் யட்டும்?'' என்று. ''அந்தப் பெருமானுடைய திருவடிக் கமலத்தியானம் எல்லா விருப்பங் களும் நிறைவேறச் செய்யும். ஆகையால் அந்தப் பாத தாமரைகளை அன்புடன் விரும்பி இடைவிடாமல் அதன் புகழை ஓதிக் கொண் டிரு. அப்போது உன் விருப்பங்கள் நிறை வேறும்'' என்கிறார் அம்மையார்.

வெள்ளநீர் ஏற்றான் அடிக்கமலம் நீ விரும்பி உள்ளமே, எப்போதும் ஓது.

'இறைவனுடைய பாதார விந்தங்களின் புகழை ஓதினல் நாம் கொண்ட எல்லா வகையான ஆசைகளும் நிறைவேறுமா? கோடிப் பொன் வேண்டும் என்று எண்ணினல் கிடைக்குமா? பெரிய பதவி வேண்டும் என்று விரும்பினல் பெறலாமா?' என்றெல்லாம் கேட் கத் தோன்றுகிறது. 'கருதிற்றெல்லாம் திருத் தலாம்' என்று அம்மையார் சொல்கிறாரே நாம் என்னவோ கருதி ஆசைப்படுகிறோம். அவை யாவும் கிடைக்குமா?!

இறைவனுடைய திருவடிக் கமலத்தைத் தியானித்து அதன் புகழைப் பாடத் தொடங்கி ஞல் நம்முடைய உள்ளம் தூய்மை பெறும். எப்போதும் பலவற்றை விரும்பி ஒன்றைவிட்டு ஒன்றுபற்றி ஓடுவது மனம். இங்கே உள்ளம் என்றது மனத்தையே. அந்த மனம் கலங்கிய வெள்ளம் கரைகடந்து ஓடும் வெள்ளத்தைப் போல எங்கெங்கோ சுற்றுகிறது. இறைவனு டைய திருவடிக் கமலத்தை விரும்பினல் அந்த ஓட்டம் நிற்க வேண்டும். ஓடும் ஆற்றில் தாமரை மலராது. குளங்களிலும் பொய்கை களிலுமே அது மலரும். நம்முடைய மனமும் ஓடுதலை நிறுத்தி அவன் அடியை விரும்பித் தியானித்தால் இந்த மனமே சலனமற்ற குளம் போல ஆகிவிடும். உளமென்னும் குளத்தில் இறைவன் திருவடிக்கமலம் தோன்றும். அதைப் புகழ்ந்து புகழ்ந்து, தியானம் செய்து தியானம்செய்து நாளடைவில் வரவேண்டிய நிலை இது.

அவனுடைய அடிக்கமலத்தை விரும்பி அதன் புகழை ஓதும் உள்ளத்தில் கண்ட கண்ட ஆசை எழாது. அது தூய்மை பெற்றுவிட்டமையால் அதில் நிறைவேறத்தக்க நியாயமான விருப் பங்களை உண்டாகும். அவை நிறைவேறுவது எளிது; இறைவன் திருவருள் துணையும் கிடைக் கும்போது மிக எளிது.

இறைவனுடைய திருவடியை எண்ணிப் புகழும் உள்ளத்தில் இறைவன் திருவருளைப் பெற வேண்டும், அவன் அருளைப் பெற்ற அடியாரோடு சேரவேண்டும் என்பன போன்ற விருப்பங்களே உண்டாகும். அவை நிச்சயமாக நிறைவேறும். இந்த அனுபவ நிலையை உணர்ந்தே அம்மையார் 'எதைக் கருதினலும் கிடைக்கும்' என்று சொன்னார்.

> கருத்தினல் நீ கருதிற் றெல்லாம் உடனே
> திருத்தல்ஆம்; சிக்கென நான் சொன்னேன்;-
> பருத்தரங்க
> வெள்ளநீர் ஏற்றான் அடிக்கமலம் நீ விரும்பி
> உள்ளமே எப்போதும் ஓது.

[என் நெஞ்சமே, நீ உன் கருத்துக்குள்ளே எதனை வேண்டுமென்று கருதுகிறாயோ அதனை யெல்லாம் உடனே பெற்று நுகரலாம்; இதை உறுதியாக நான் சொன்னேன்; (அதற்கு இது தான் வழி.) பெரிய அலைகளையுடையதாய் வெள் ளமாகப் பரந்து வந்த கங்கைநீரை அடக்கித் தன் தலைப்பாரத்தில் ஏற்றுக்கொண்ட சிவ பெருமானுடைய திருவடித் தாமரையை நீ விரும்பி எப்போதும் அவன் திருநாமத்தையும் புகழையும் ஓதிக்கொண்டே இரு.

உள்ளத்துக்குக் கருத்து இருப்பதாகச் சொல்வது கவிமரபு. கருதிற்று - தொகுதி ஒருமை, திருத்தலாம்-செவ்வையாக அனுபவிக்கலாம், சிக்கென, உறுதியாக, சிக்கெனத்திருத்தலாம். என்று கூட்டியும் பொருள் கொள்ளலாம்.

அகங்கார மிகுதியாகி என்னைத் தாங்குவார் யார் என்று 'விண்ணுக்கடங்காமல் வெற்புக்கடங்காமல்' வந்த கங்கையாதலின் 'பழுத் தரங்க வெள்ளநீர்' என்றார்.

அவன் திருமுடி பரந்து வந்த அலைகளை அடக்கியது போல அவன் திருவடியும் அலைபாயும் மனத்தை ஒருமுகப் படுத்துவது. அப்படி ஒருமுகப்பட்ட மனத்தில் ஆசைகள் எழா. எழுந்தாலும் நிறைவேற்ற முடியாத பேராசைகளாக இரா. எனவே அவை நிறைவேறுவது அரிதன்று. ஒதுதல் பலகால சொல்லுதல்.]

இறைவன் திருவடித் தியானத்தால் நாம் விரும்பும் நலம் எண்ணங்களெல்லாம் நிறைவேறும் என்பதுக் கருத்து.

அற்புதத் திருவந்தாதியில் வரும் 73-ஆவது பாடல் இது. ☆

## கபீர்தாசர்

மகான்கள் ஏன் சிரிக்கிறார்கள், ஏன் அழுகிறார்கள் என்பதையெல்லாம் உள்ளது உள்ளபடியே நம்மால் புரிந்துகொள்ள இயலாது என்றுதான் சொல்ல வேண்டும்.

கபீர்தாசர் ஒரு சமயம் எங்கோ சென்றுகொண்டிருந்தபோது ஒரு திரிகையில் மாவு அரைப்பதைப் பார்த்துவிட்டுக் கோவெனக் கதறி அழுதார். அதைக் கண்டு சீடர்கள் நடுங்கி விட்டனர். சிறிது நேரத்திற்குப் பிறகு அவர் சற்றுச் சாந்தமடைந்ததும் மிகவும் வணக்கத்துடன் பக்குவமாக அவர் அழுத காரணத்தைக் கேட்டார்கள்.

அவர், "குழந்தைகளே! என்னவென்று சொல்வது? நாமும் இந்த தானியங்களைப் போலவே மாவாக அரைக்கப்படுகிறோமே என்று நினைத்துத்தான் அழுதேன்" என்றார்.

சீடர்களுக்கு அவர் சொன்னது விளங்கவில்லை. "நாமாவது, மாவாக அரைக்கப்படுவதாவது! தாங்கள் சொல்வது எங்களுக்குப் புரியவில்லையே?" என்று சீடர்கள் கபீர்தாசரிடம் வினவினர்.

"ஆகாயம் திரிகையின் மேல்பாகம். பூமி அடிப்பாகம். நாம் அதில் அகப்பட்டுக் கொண்ட தானியங்கள். நாம் நிச்சயமாக மாவாக்கப்படுவோம். ஆனால் மற்றோர் உண்மை இருக்கிறது. யந்திரத்தின் அச்சே பகவான். அச்சைச் சுற்றி நெருங்கியிருக்கும் தானியம் மாவாகாது. அதனால் பகவானான அச்சை நெருங்கியிருந்தால் நாம் அரைபடமாட்டோம். ஆனால் நாம் எப்படி இருக்கிறோம் என்பது நமக்கு எங்கே புரிகிறது? அதனால்தான் அழுதேன்" என்று அவர் பதில் கூறினார்,

அவர் கூறியதைக்கேட்டுச் சீடர்கள் வியப்புற்றனர்.

—கோமதி ராஜாங்கம்.



# பரமார்த்தப் பிரசங்கம்

## சுவாமி விரஜானந்தர்

பகவானை அடைய வேண்டும் என்ற ஆவலும், அவரை அடையாத வரையில் ஒரு பெரிய குறை இருப்பதாக உணர்வதுமே மத வாழ்க்கையின் முக்கிய அம்சமாகும்.

எந்தப் பொருள்கள் இல்லாது போகுமானல் வாழ்க்கையே நடைபெருதோ, அந்தப் பொருள்கள் இல்லாதபோது அவற்றின் இல்லாமையை நாம் மிகவும் உணர்ந்து கலங்குகிரும். உதாரணமாக, காற்று, உணவு, உடை, உறைவிடம் ஆகியவை இல்லாது போகுமானல் பெரிதும் கலங்குகிருேம்.

அது போலவே, அதே ஆர்வத்துடன், கடவுள் நமக்கு இல்லாதிருப்பதை நினைத்து உண்மையிலேயே நாம் உருகுகிருேமா? சொல்லப்போனல், கடவுளைத் தவிர மற்ற எல்லாவற்றையும் நாம் விரும்புகிருேம். அதற்குக் காரணம், நமது வாழ்க்கைக்கு வழக்கமாகத் தேவைப்படும் எல்லாச் சாதாரணப் பொருள்களும் புறவுலகிலேயே நமக்குக் கிடைத்து விடுகின்றன.

புறவுலகத்தினுல் நமக்குத் தரவே இயலாத ஏதோ ஒரு பொருளை நாம் தீவிரமாக நாடும் போதுதான் - இதயத்தின் ஆவலையும் ஆன்மிகப் பசியையும் புறவுலகத்தினுல் தணிக்க இயலாது என்பதை நாம் தெளிவாக அறிந்து கொள்ளும்போதுதான்-அத்தகைய ஒரு நேரம் வரும்போது மட்டுமேதான்-நாம் நம்முடைய பார்வையை உள்முகமாகச் செலுத்தி உள் உலகில் (உட்புற உலகில்) உதவியை நாடுகிருேம்.

மீண்டும் மீண்டும் துன்பங்களையும் அவதிகளையும் அனுபவித்த பிறகுதான் ஒரு படிப்பினை நமது உள்ளத்தில் ஆழமாகப் பதிகிறது. நாம் இதுவரை செய்து சாதித்ததெல்லாம் வெறும் குழந்தை விளையாட்டுகளே தவிர வேறல்ல; இந்த உலகம் ஒரு கனவைப் போலப் பொய்யானது; எந்தப் பொருளையும் நமக்குச் சொந்தமானது என்று நாம் கட்டிப் பிடிக்க முயற்சி செய்தோமானல் அந்தப் பொருள் நமது கையை விட்டு நழுவியே போய்விடும்-என்பதையெல்லாம் தெளிவாக அறிந்துகொள்கிருேம். அப்போதுதான், அழியாமல் நித்தியமாக இருக்கும் ஒரு பொருளை அடைய நமது உள்ளம் ஆவல் கொள்கிறது. அந்தப் பொருளைப் பெற்ருல்தான் நம்முடைய எல்லாத் துன்பங்களும், எல்லாவிதக் குறைபாடுகளும் வேருடன் நாசமாகின்றன. அந்தப் பொருள் பரமேசுவரன் ஒருவரே ஆவார்.

மனம் உலகப் பொருள்களின்மீது வைராக்கியம் கொள்ள வேண்டும்; கடவுளை இன்னும் அடையாமல் இருக்கிருேமே என்று உண்மையான அருள்தாகத்துடன் இருக்க வேண்டும்-இத்தகைய மனப்பான்மை கொண்டிருப்பதே ஆன்மிக வாழ்க்கைக்கு உரிய முதற்படியாகும்.

* * *

சர்வநாசத்திற்கும் காரணமாக இருக்கும் அதர்மத்தினுடைய வம்ச பரம்பரையைப்பற்றி ஸ்ரீமத் பாகவதத்தில் பின்வருமாறு கூறப்பட்டிருக்கிறது:-

அதர்மத்திற்கு மனைவியாக இருப்பது மித்யை (பொய்) ஆகும். இந்த இருவருக்கும் கர்வம் என்ற மகனும், மாயை என்ற மகளும் பிறந்தார்கள். கர்வமும் மாயையும் ஒருவரை ஒருவர் திருமணம் செய்துகொண்டார்கள். அவர்களுக்குப் பேராசை என்ற மகனும், வஞ்சகம்

என்ற மகளும் பிறந்தனர். இந்த இரு வருடைய சேர்க்கையால் குரோதமும் பொரு மையும் தோன்றினர். குரோதத்திற்கும் பொரு மைக்கும் கலி என்ற மகனும், தீய பேச்சு என்ற மகளும் பிறந்தனர். கலியோ தீயபேச்சு என்ற பவளின் கர்ப்பத்தில் பயம் என்ற பெண்ணையும், மரணம் என்ற மகனையும் உண்டுபண்ணினன். வேதனையும் நரகமும் இவர்களுடைய குழந்தை களே ஆவார்கள்.

* * *

அறம் பொருள் இன்பம் வீடு என்று சொல் லப்படும் நான்கு புருஷார்த்தங்களுக்கும் கார ணமாக இருப்பது தர்மமாகும். அந்தத் தர்மத் தின் குடும்பத்தைப் பற்றியும் பரிவார வம்சத் தைப்பற்றியும் ஸ்ரீமத் பாகவதம் பின்வருமாறு குறிப்பிடுகிறது:-

ஒரு வம்சத்தில் பதின்மூன்று சகோதரிகள் இருந்தார்கள்:- 1. சிரத்தை, 2. நட்புணர்ச்சி (மைத்திரி), 3. தயை, 4. சாந்தி, 5. திருப்தி (துஷ்டி), 6. நல்ல போஷணையைத் தரும் சத்து (புஷ்டி), 7. செயல்களில் ஈடுபடுதல் (கிரியை), 8. உயர்வு (முன்னேற்றம், உன் னதி), 9. அறிவாற்றல் (புத்தி), 10. வலிமை, 11. பொறுமை (சகிப்புத்தன்மை, திதிக்ஷை), 12. நாணம் (வெட்கம், லஜ்ஜை), 13. மூர்த்தி (உருவம்).

மேற்கூறிய பதின்மூன்று பேரும் தர்மத்தின் மனைவியர் ஆவர். இவர்களுக்குப் பிள்ளைகள் பிறந்தார்கள். தாயின் பெயரும் மகனின் விவ ரமும் வருமாறு.

| தாய் | மகன் |
|---|---|
| சிரத்தை | — உண்மை (சத்தியம்) |
| நட்புணர்வு | — ஆழ்ந்த அமைதி (மனத்தெளிவு, ப்ரஸாதம்) |
| தயை | — அச்சமின்மை (அபயம்) |
| சாந்தி | — தன்னடக்கம் (சமம்) |
| திருப்தி | — சந்தோஷம் |
| புஷ்டி | — பெருந்தன்மை |
| கிரியை | — யோகம் |
| உயர்வு | — தன்மானம் |
| புத்தி | — சொத்து |
| பலம் | — ஞாபக சக்தி |
| திதிக்ஷை | — மங்களம் |
| லஜ்ஜை | — பணிவு (வினயம்) |

மூர்த்தி என்பவள் தர்மத்தின் மிக இனிய மனைவி. அவள் எல்லா நல்லியல்புகளுக்கும் உறைவிடமாகத் திகழ்ந்தாள். அவள் நர நாராயணர் என்ற தெய்விக ரிஷிகளை ஈன் றெடுத்தாள்.

* * *

மூளைக்கும் இதயத்துக்கும் போட்டி ஏற்படு மானல் இதயத்தின் குரலுக்கே எப்போதும் செவிசாயுங்கள். புத்தியின் விருத்திகளுக்கு முக்கிய இடமாக இருப்பது மூளை. அதுவே ஞானேந்திரியங்களுக்கு முக்கியக் கேந்திரமாக விளங்குகிறது.

ஞானேந்திரியங்கள் வருமாறு:- 1. காது- கேட்டல் அதாவது சிரவண இந்திரியம், 2. கண் - சக்ஷுஸ் என்ற பார்வை இந்திரியம், 3. மூக்கு-மோத்தல் என்ற வாசனை இந்திரியம், 4. தோல் - தொடுதல் என்ற ஸ்பர்ச இந் திரியம், 5. நாக்கு - சுவை என்ற ரஸம் அறி யும் இந்திரியம்.

மூளையிலிருந்தே ஒரு பொருளைப்பற்றி அறிந்துகொள்வதற்குத் தேவையான மனச் சக்தி முழுவதும் நமக்குக் கிடைக்கிறது. ஜீவ னுடைய உட்பகுதியைக் கிளறும் எல்லாவித உணர்ச்சிகள், தூண்டுதல்கள், அனுபவங்கள் ஆகியவற்றிற்கு இருப்பிடமாக இருப்பது இதயமாகும்.

புத்திமான்களாக (அறிவுள்ளவர்கள்) இருப்பவர்கள் பலவேறு சாஸ்திரங்கள், விஞ் ஞானம், வித்தைகள் ஆகியவற்றில் கரைகண்ட வர்களாக இருக்கிறார்கள். அவர்கள் பெரும் பண்டிதர்களாகவும் விற்பன்னர்களாகவும் போதகர்களாகவும், புத்திக்கூர்மையுள்ள வர்களாகவும், சாமர்த்தியசாலிகளாகவும், பல வேறு விஷயங்களில் திறமை படைத்தவர் களாகவும் உள்ளனர்.

190 ம் பக்கம் பார்க்க




## இளையான்குடி மாறனார்

விவேகானந்ததாசன்

அதிகமாகப் பணம் இருப்பவர்களுக்குப் பொதுவாகக் கடவுள் பக்தி வருவதில்லை. பொருட்செல்வம் அவர்களுடைய ஆன்மிக வாழ்க்கைக்குத் தடையாகவே அமைகிறது. செல்வச் செருக்குக் கொண்டவர்கள் கடவுளின் திருவருளைப் பெறவே முடியாது.

பொருட்செல்வம் இருந்தபோதிலும், ஆண்டவனிடம் உண்மையான பக்தி செலுத்துவர்கள் மிக மிகச் சிலரே ஆவர். அப்படிப்பட்டவர்களிலுங்கூடப் பொருட்செல்வத்தை இழந்த பிறகும், கடவுளிடம் தொடர்ந்து பக்தி செலுத்துபவர்கள் மிகவும் அபூர்வமாகத்தான் இருப்பார்கள். அவர்களுள் ஒருவருடைய வரலாறு பெரிய புராணத்திலே இடம் பெற்றுள்ளது.

மாறனார் என்பது அவருடைய பெயர். இளையான்குடி என்னும் ஊரிலே அவர் வாழ்ந்து வந்தார். ஆகவே இளையான்குடி மாறனார் என்று மக்கள் அவரை அழைத்தார்கள் மாறனார். உழவுத் தொழிலைச் செய்து சீரும் சிறப்புமாக வாழ்ந்து வந்தார்.

திரண்ட பெருஞ்செல்வம் மாறனாருக்கு இருந்தது. அத்துடன் திரண்ட அருட்செல்வமும் அவருக்கு இருந்தது. ஆகவே எல்லாவிதத்திலும் அவருடைய வாழ்க்கை வளமாகவே அமைந்திருந்தது.

மாறனார் சிவனடியார்களிடம் அளவில்லாத ஈடுபாடு கொண்டவர். சிவனடியார்களைச் சிவகணங்களாகவே நினைத்து அன்பு பாராட்டி உபசரிப்பது மாறனாரின் வழக்கம்.

வறுமையும் துன்பமும் வரும் அளவுக்கு உண்மையான பக்தர்களிடம் மேலும் மேலும் நல்ல பண்புகள் ஓங்கவே செய்யும். வறுமையில் வாடினாலும் அவர்கள் பக்திநெறியிலிருந்து பிறழ மாட்டார்கள். உண்மைப் பக்திக்கு வறுமை தடையாக அமையாது. இந்த உண்மைகளை மாறனாரின் மூலமாக உலகிற்கு உணர்த்தச் சிவபெருமான் திருவுள்ளம் கொண்டார்.

சிவபெருமானின் லீலை காரணமாக மாறனாரின் செல்வம் கரைந்தது. வறுமையில் வாடும் நிலைக்கு அவர் வந்து விட்டார். தமது சொத்துக்களை விற்றார். அதனால் வந்த பொருளைக்கொண்டு சிவனடியார்களுக்குச் செய்ய வேண்டிய தொண்டை இயற்றி வந்தார். அந்தப் பொருளும் தீர்ந்தது. முடிவில் பட்டினி கிடக்க வேண்டிய நிலையும் அவருக்கு ஏற்பட்டுவிட்டது.

ஒரு நாள் இரவு நேரம். மழை கடுமையாகப் பாட்டம் பாட்டமாகப் பெய்து கொண்டிருந்தது. அன்று மாறனாரும் அவரது இல்லத்தரசியும் சாப்பாட்டிற்குக் கூட எதுவும் இல்லாமல் பட்டினி இருந்தார்கள்.

அப்போது சிவபெருமான் ஒரு சிவனடியாரின் வடிவத்துடன் மழையில் சொட்டச் சொட்ட நனைந்துகொண்டே மாறனாரின் வீட்டுக் கதவை வந்து தட்டினார்.

வரும் விருந்து பார்த்தே பழக்கப்பட்டவர் மாறனார். இப்போதும் அவர் வந்த விருந்தினரை இன்முகம் கூறி வரவேற்றார். சிவனடியார் தமக்குப் பசி தணிய உணவிடும்படி கூறினார். அதைக் கேட்டதுமே மாறனாரின் உள்ளம் துடித்தது. வீட்டிலோ உணவுப்பொருள் என்று சொல்லத்தக்கதாக ஒன்றுமே இல்லை. மாறனார் என்ன செய்வார்? துயரம் அவரது உள்ளத்தை கசக்கிப் பிழிந்தது. மாறனாரின் மனைவியோ செய்வது அறியமால் திகைத்தாள்.

திடீரென்று அவளுக்கு அன்றைய தினம் அவர்கள் வயலில் விதைத்த நெல்லைப் பற்றிய நினைவு வந்தது. அவள் தன் கணவரிடம், “இன்று நாம் வயலில் விதைத்த நெல்லை ஒரு கூடையில் வாரி வாருங்கள். அதைக் கொண்டு விருந்தினராக வந்திருக்கும் சிவனடியாருக்கு அமுது செய்விக்கலாம்” என்றாள். சிவனடியாரை உபசரிக்க ஒரு வழி இருக்கிறது என்று கேட்ட மாத்திரத்திலேயே, மாறனாருக்குத் தலையிலிருந்து ஒரு பெரிய பாரம் இறங்கியதைப் போல இருந்தது. அப்போதே அவர் கூடையை எடுத்துக்கொண்டு வயலுக்குக் கிளம்பினார். மழையோ பலமாகப் பெய்துகொண்டிருந்தது. மாறனார் எதையும் பொருட்படுத்த வில்லை. அவரது நினைவு முழுவதும் சிவனடியாருக்கு அமுது படைப்பதிலேயே இருந்தது.

மாறனார் வயலை அடைந்தார். நீரில் காலையில் விதைத்த நெல் மிதந்து கொண்டிருந்தது. அவற்றையெல்லாம் வாரிக் கூடையில் போட்டார். கூடை நிரம்பியதும் அதைத் தலையில் தூக்கி வைத்துக்கொண்டு விரைவாக வீட்டை அடைந்தார்.

மாறனாரின் மனைவி கணவரின் வரவை எதிர்நோக்கி வழிமேல் விழி வைத்துக் காத்திருந்தாள். கணவர் கொண்டு வந்த கூடையை உள்ளே எடுத்துச் சென்றாள். அதில் இருந்த நெல்லை நன்றாகச் சுத்தப்படுத்தினாள் அடுத்து அடுப்பைப் பற்ற வைக்க வேண்டும். வீட்டிலோ விறகு இல்லை. வெளியிலோ அடைமழை பெய்து கொண்டிருந்தது.

வீட்டிலே கூரை சரியாக நிற்பதற்காக தூண் ஊன்றப்பட்டிருந்தது. மாறனார் அதை இழுத்து எடுத்து அடுப்பு எரிக்க மனைவியிடம் கொடுத்தார். அம்மையாரும். நெல்லை உரலில் இட்டுக் குற்றிச் சோறு சமைத்தார். சோறு தயாராகிவிட்டது. அடுத்துக் கறி வேண்டுமே! மாறனார் வீட்டின் பின்புறம் இருந்த தோட்டத்திற்கு ஓடினார். அங்கு முளைத்திருந்த சிறிய கீரைகளை அவரே அவசரமாகப் பறித்து வந்து மனைவியிடம் கொடுத்தார். வல்லவனுக்குப் புல்லும் ஆயுதம் அல்லவா மாறனார் கொண்டு வந்த சிறிய கீரைகளையே பல கறிகளாக அம்மையார் அருமையாகச் சமைத்துவிட்டார். இனியும் மாறனார் வந்த விருந்தினரைப் பசித்திருக்க விடுவாரோ? அமுது செய்ய எழுந்தருளும்படி சிவனடியாரை வேண்டச் சென்றார்.

நடிப்பில் தேர்ந்தவர் அல்லவா கூத்தப்பெருமான்! உறங்குவது போல அவர் அங்கு நடித்துக்கொண்டிருந்தார். மாறனார் கைகூப்பிச் சிவனடியாரை நெருங்கி “பிறவியாகிய பெருங்கடலில் சிக்கித் திணறும் அடியேன் உய்யும் பொருட்டு என்மீது கருணை கூர்ந்து இங்கு எழுந்தருளிய பெரியோரே! அமுது தயாராகிவிட்டது. தாங்கள் திருவமுது செய்ய எழுந்தருள வேண்டும்” என்று இறைஞ்சி நின்றார்.

சிவனடியாராக வந்த சிவபெருமானுக்கு மேலும் தமது பக்தனைச் சோதிக்க மனம் இல்லை. அன்பர் பணி செய்தால் இன்பநிலை தானாக வரும் அல்லவா?

சிவனடியார் வேடம் நீங்கிச் சிவபெருமான் சுய உருவம் கொண்டு மாறனாருக்கு காட்சி தந்தார். மாறனாரும் அவரது மனைவியும் எதிர்பாராமல் கிடைத்த பெருமனின் காட்சி கண்டு மனம் பூரித்தார்கள். ரிஷபவாகனத்தில் சிவபெருமான் உமையாளோடு இருந்தபடி, "மாறனே! அன்பர் பணியைச் சிறப்பாகச் செய்து வந்த உனக்கு இன்பநிலை தவறாமல் கிடைக்கும். நீங்கள் இருவரும் என்னை அடையும்போது குபேரன் உங்களுக்குக் கைகட்டிச் சேவகம் புரிவான்" ★ என்று கூறி அருள்புரிந்து மறைந்தார்.

---

# விஷ்ணு தத்துவம்

பிரம்மசாரி முத்துக்குமார்

### சர்வவியாபி

எல்லையற்றுப் பரந்து விரிந்திருக்கும் கடலும் வானமும் நீல நிறமாகத் தோன்றுகின்றன. வானளாவிய மலைகள் நீண்ட தூரத்திலிருந்து பார்த்தால் நீல நிறமாகக் காட்சி தருகின்றன. இயற்கையில் எங்கும் பரந்து வியாபித்திருக்கும் பொருள்களெல்லாம் நீல நிறமாகத் தோன்றுவது இயல்பு. இறைவன் நீக்கமற எங்கும் நிறைந்திருப்பவன். பரம்பொருளின் சர்வ வியாபகத் தன்மையை உணர்த்துவதாக மகாவிஷ்ணுவின் நீலநிற மேனி திகழ்கிறது.

எல்லாவற்றினுள்ளும் புகுந்து அந்தர்யாமியாக விளங்குபவன் இறைவனே என்பதை விஷ்ணு என்ற திருநாமம் விளக்குகிறது. அவரே பிரபஞ்சரூபமாகவும் வெளிப்பட்டிருக்கிறார். இறைவனை உலகத்திலும், உலகத்தை இறைவனிலும் கண்டவர்கள் ஞானிகள். பிரபஞ்சம் இறைவனின் உடலாகவும், இறைவன் அதன் உயிராகவும் விளங்குகிறார் என்று விசிஷ்டாத்வைதம் கூறுகிறது.

மகாவிஷ்ணுவுக்கு நாராயணன் என்ற மற்றொரு திருநாமமும் உண்டு. 'நார' என்பது பரமாத்மாவிலிருந்து தோன்றிய உலகுயிர்கள், பஞ்சபூதங்கள் ஆகிய அனைத்தையும் குறிக்கும், 'அயனன்' என்பது அமர்ந்திருப்பவன் என்று பொருள்படும். நார + அயனன் = நாராயணன் என்று ஆயிற்று. தன்னிடமிருந்து தோற்றுவிக்கப்பட்ட நூல்வலையில் சிலந்திப் பூச்சி குடியிருப்பது போல, தம்மிடமிருந்து தோன்றிய பிரபஞ்சம் முழுவதிலும் இறைவன் அந்தர்யாமியாக வீற்றிருக்கிறார். எனவே இறைவன் நாராயணன் எனப்படுகிறார்.

### பிரபஞ்சரூபம்

எவருக்குப் பூமி பாதங்களாகவும், வானம் நாபியாகவும், வாயு பிராணனாகவும், சந்திரனும் சூரியனும் கண்களாகவும், திக்குகள் காதுகளாகவும், தேவலோகம் தலையாகவும், அக்கினி வாயாகவும், சமுத்திரம் அடிவயிறாகவும் அமைகின்றனவோ, எவருடைய வயிற்றில் தேவர், மனிதர், பறவைகள், மிருகங்கள், நாகர், கந்தர்வர், அசுரர் என்று விரிந்த உலகம் விசித்திரமாக விளையாடிக் களிக்கிறதோ அந்த மூவுலக வடிவினரும் ஈசருமான விஷ்ணுவை நமஸ்கரிக்கின்றேன்'' என்று விஷ்ணு ஸஹஸ்ர நாமத்தின் பூர்வபாகத்தில் பரம்பொருளின் பிரபஞ்சவடிவமான விளக்கம் அமைந்துள்ளது.

### நித்தியரூபம்

எங்கும் நிறைந்த பூர்ணராக இறைவன் விளங்குகிறார். எனினும் உருவங்களுக்கெல்லாம் மூலமானதும், ஊற்றாக விளங்குவதுமான முதல் உருவத்தை அவரே கொண்டிருக்கிறார். சடப்பொருளால் ஆன இந்த உலகைப் போன்று இல்லாமல் சுத்தசைதன்யத்தால் ஆனது வைகுண்டம் என்ற மேலான உலகம். அங்கே

சச்சிதானந்த மயமான பகவான் விஷ்ணு சுத்தசைதன்ய உருவத்தில் விளங்குகிறார் என்று வைணவம் கூறுகிறது. ''கடலில் உறைந்துள்ள பனிக்கட்டிகளில் சில எப்போதுமே உருகாமல் அவற்றுக்கு உரிய வடிவங்களில் இருந்து வருகின்றன. அது போன்றே பரம் பொருளுக்குப் பிரளயகாலத்திலும் அழியாத நித்திய வடிவங்கள் சில இருக்கின்றன, அந்த வடிவங்கள் சில பக்தர்களின் காட்சிக்கு எட்டுகின்றன'' என்று பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ணர் குறிப்பிட்டிருக்கிறார்.

மகாவிஷ்ணுவின் ஆறுவிதமான கல்யாண குணங்களைப்பற்றி வைஷ்ணவ மதம் கூறுகிறது. அந்த ஆறுவிதத் தெய்விக குணங்களைக் கொண்டவர் விஷ்ணு என்பதைக் குறிக்க அவர் 'பகவான்' என்ற அடைமொழியால் அலங்கரிக்கப்படுகிறார். ஆனால் உபநிஷதங்களும் பௌத்தமதமும் உயர்நிலை எய்திய ஞானிகளையும் 'பகவான்' என்று குறிப்பிடுகின்றன.

திருக்கோலங்கள்

மகாவிஷ்ணு எப்போதும் நான்கு நிலைகளில் இருக்கிறார் என்று வைணவம் கூறுகிறது. அசையும் நிலை, அமர்ந்த நிலை, அறிதுயில் நிலை, மனிதர்களின் இதயத்தில் உறையும் நிலை ஆகியவை அந்த நான்கு நிலைகளாகும்.

மகாவிஷ்ணுவின் திருவுருவம் ஆலயங்களில் மூன்று நிலைகளில் வைத்துச் சேவிக்கப்படுகின்றன. நின்ற திருவடிவமாகவும், இருந்த திருக்கோலமாகவும், ஆதிசேஷனில் பள்ளி கொண்ட நிலையாகவும் அவை அமைந்துள்ளன.

ஒரு கையில் பாஞ்சசன்யம் என்ற சங்கினையும், மற்றொரு கையில் ஸுதர்சனம் என்ற சக்கரத்தையும், ஒரு கையில் கௌமோதகி என்ற கதையினையும் விஷ்ணு தாங்கியுள்ளார். ஒரு கை அபயஹஸ்தமாகவும் அமைந்திருக்கிறது. பகவான் அழகிய தாமரைமலரை ஏந்தியவாறும், சார்ங்கம் என்னும் வில்லை ஏந்தியது போலவும் திருக்கோலம் உண்டு. ஸ்ரீவத்ஸம் என்னும் மறுவை அடையாளமாகவும், கௌஸ்துபமணியால் பிரகாசிக்கும் அங்கங்களை உடையவராகவும் அவர் விளங்குகிறார். தேனிக்கள் மொய்க்கும் வனமாலை அவரது கழுத்தை அலங்கரிக்கிறது.

திருக்கோல விளக்கம்

பாகவதத்தில், பன்னிரண்டாம் ஸ்கந்தத்தில் பதினோரும் அத்தியாயத்தில், மகாவிஷ்ணுவின் திருவுருவத்திற்குத் தத்துவ விளக்கம் தரப்பட்டுள்ளது. பகவானையே ஆதாரமாகக் கொண்டிருக்கும் ஆத்மஜோதியாகிய ஜீவ சைதன்யத்தைக் கௌஸ்துபமணி என்ற அடையாளமாக அவர் தரித்திருக்கிறார். அதிலிருந்து பரவும் காந்தியால் பிரகாசிக்கும் ஸ்ரீவத்ஸம் என்னும் மறுவைப் பகவான் மார்பில் கொண்டுள்ளார்.



பகவான் அணிந்துள்ள வனமாலை பலவிதக் குணங்களின் வடிவமான அவரது மாயா சக்தியைக் குறிக்கிறது. அவர் அணிந்திருக்கும் மஞ்சள்நிறப் பீதாம்பரம் வேதங்களின் அடையாளமாகும். மூன்று மாத்திரைகளைக் கொண்ட பிரணவத்தை அவர் பூணூலாகத் தரித்திருக்கிறார். ஸ்ரீ பதியாகிய நாராயணன், தம்மை அடையும் சாதனங்களான ஞானயோகம்,

அஷ்டாங்க யோகம் ஆகியவற்றின் மகர குண்டலங்களாகவும், ஆன்மிகச் சாதனைகளால் அடையப்படும் மேலான பதமாகிய பிரம்ம லோகத்தை மகுடமாகவும் கொண்டுள்ளார்.

அறிதுயில்

மகாவிஷ்ணு பாற்கடலில் ஆதிசேஷன் என்னும் பாம்பணையின் மீது அறிதுயில் கொண்டிருக்கிருர். பிரபஞ்சமெல்லாம் பிரளயத்தில் ஒடுங்கி அவ்யக்த நிலைக்கு செல்வதைக் கடல் விளக்குகிறது. பிரபஞ்சம் அனைத்தும் ஒடுங்கிய காலத்தில் அண்டங்கள் அனைத்துக்கும் ஆதிசக்தி ஆதாரமாக இருக்கிறது. பாம்பு சக்தியின் சின்னம். ஆதிசேஷன் என்ற பாம்பு ஐந்து தலைகளைக் கொண்டவனுகவும், ஆயிரம் தலைகளை உடையவனுகவும் வர்ணிக்கப் கப்படுகிருன். ஐந்து தலைகள் ஐம்பூதங்களையும், ஆயிரம் தலைகள் எண்ணிக்கையில் அடங்காத உயிரினங்களையும் குறிக்கின்றன. இவை யாவும் பிரளய காலத்தில் ஒடுங்கிக் காரண நிலைக்குச் சென்ற பிறகு ஆதி சக்தி எஞ்சியிருக்கிறது. ஆதி சக்தி பகவானிலிருந்து வேறுபட்டதல்ல. இறைவன் அந்தச் சக்திக்கும் ஆதிமூலமாகத் திகழ்பவன். பாலில் வெண்மை கலந்திருப்பது போன்று, மூலப் பிரகிருதியானது இறைவனையே இருப்பிடமாகக் கொண்டிருக்கிறது. தோற்றத்திலும் ஒடுக்கத்திலும் இறைவனுக்கு அன்னியமாகச் சக்தி இருக்கவே முடியாது. இந்தத் தத்துவ உண்மையை விளக்கும் வகையில் பெருமான் பாம்பணையில் எழுந்தருளியிருக்கும் திருக்கோலம் அமைந்துள்ளது. அமைதியையும் தூய்மையையும் குறிக்கும் பாற்கடலில் தமோகுணத்தின் அடையாளமான அதிசேஷன் என்ற பாம்பை அடக்கி, அதன் மேல் பரந்தாமன் அறிதுயில் கொண்டிருக்கிருர் என்றும் விளக்கம் கூறலாம்.

காலசக்கரம்.

சங்கும் சக்கரமும் மகாவிஷ்ணுவுக்கு உரிய முக்கிய அடையாளச் சின்னங்களாகும். அப்பு (நீர்) தத்துவத்தைக் குறிக்கும் சங்கு, எல்லாப் பிரபஞ்சத் தோற்றங்களுக்கும் மூலகாரணமான பிரணவ ஒலியும் இறைவனிடமிருந்தேதான் தோன்றுகிறது என்பதை விளக்கும் அடையாளமாகவும் திகழ்கிறது. பகவான் தரித்துள்ள சுதர்சனம் என்ற சக்கரம் தேயு (தீ) தத்துவத்தின் அடையாளமாகும். யுகந்தோறும் அஞ்ஞானத்தையும் அதர்மத்தையும் அழித்துத் தர்மத்தையும் ஞானத்தையும் நிலைநிறுத்தும் மகாவிஷ்ணுவின் தொழிலைக் குறிக்கும் அடையாளமாகவும் தர்ம சக்கரம் விளங்குகிறது. பல ஆரங்களைக் கொண்ட சக்கரம் பகவானின் திருக்கரத்திலிருந்து சுழல்கிறது. அவ்விதம் சுழல்வது பகவானே எல்லாவற்றிற்கும் மையம் என்பதை உணர்த்துகிறது. அதே சக்கரம் காலசக்கரமாகவும் பொருள் படுத்தப் படுகிறது. ஆரம்பமும் முடிவும் இல்லாத காலத்திலிருந்து காலசக்கரம் சுழன்றபடி இருக்கிறது. எத்தனையோ கல்பங்கள், யுகங்கள், தோற்றங்கள் மாறி மாறி வந்துகொண்டிருக்கின்றன, பகவானே காலசொருபம் என்பதையும், காலசக்கரம் அவர் கையில் இருப்பதனுல் மாறிக் கொண்டேயிருக்கும் இந்தப் பிரபஞ்சத்தில் மாருத நித்தியமான பொருள் அவரே என்பதையும் சக்கரம் ஏந்திய அவரது நிலை விளக்குகிறது.

மென்மையும் வன்மையும்

இனிய இயல்புக்குத் தாமரைமலர் சின்னமாக விளங்குகிறது. பக்தர்களிடம் பகவான் இனிமையே வடிவெடுத்தவராகத் தோன்றுகிருர். பகவானின் இனிய குணங்களை உணர்ந்தே பக்தர்கள் 'அளிவளர் உள்ளத்து ஆனந்தக் கனியே!' என்றும், 'சித்தத்துள் தித்திக்கும் தேனே!' என்றும் கசிந்துருகிப் பாடியுள்ளனர். நினைக்கும் இதயங்களிலெல்லாம் இறைவன் இனிமையே வடிவெடுத்தவனுகத் தோன்றுவான் என்பதன் அடையாளமாகப் பகவானின் கையில் தாமரைப்பூ அமைந்துள்ளது. பகவானின் ஆறுவகைக் குணங்களின் அடையாளமாகவும் தாமரைமலர் திகழ்கிறது. பகவான் விஷ்ணுவைத் தியானிப்பதனுல் பக்தன் பக்தியின் அதி உன்னத நிலையை அடைவான் என்பதையும் விஷ்ணுவின் தாமரை குறிக்கிறது.

எல்லா உலகுயிர்களுக்கும் தலைவன் இறைவன். அவன் வன்மையான பெரு

வல்லமையின் உருவமாகவும் விளங்குகிருன். அவர்களுக்கு ஏற்ற முறைகளைக் கையாண்டு இறைவன் ஆட்கொள்ளுகிருன். பிரகலாத னுக்கு அமுதமாகத் தோன்றிய இறைவன் ஹிரண்யகசிபுவுக்கு நரசிம்மமாகத் தோன்றி அவனது அகங்காரத்தை அடக்கி அருள் புரிந்தார். பிரபஞ்சமெங்கும் வியாபித்துள்ள சக்தியின் ஊற்ருக விளங்கும் பிராணசக்தி, வீர்யம், பொறுமை போன்றவற்றை விளக்கும் வகையில் மகாவிஷ்ணுவின் கையிலுள்ள கதாயுதம் அமைந்துள்ளது.

பாற்கடல்

மகாவிஷ்ணுவின் சயனக்கோலம் அவர் எங்கும் நிறைந்திருப்பவர் என்பதை உணர்த்துகிறது. அலைகள் இல்லாத பாற்கடலில் பரமன் பள்ளிகொண்டுள்ளார். சலனம் அற்றிருக்கும் பாற்கடல் சஞ்சலமில்லாத அடங்கிய மனதைக் குறிக்கிறது. ஆசைகள் அழிந்த தூய உள்ளத்திலேயே இறைவன் எழுந்தருளுவான் என்பதையே பரமன் சலனமற்ற பாற்கடலில் பள்ளி கொள்ளும் நிலை உணர்த்துகிறது. பார்க்கும் இடம் எங்கும் நீக்கமற இறைவன் பரந்து விளங்குகிருன் என்பதையும் பாற்கடல் உணர்த்துகிறது.

பரம்பொருளின் எல்லையற்ற திருவருள் பாற்கடலைப்போல் எல்லையற்று அருளமுதக் கடலாக விளங்குகிறது. ஆன்மாக்கள் அதனை அடைந்து பேரானந்தத்தை அனுபவிக்க வேண்டியதையும் பாற்கடல் குறிப்பிடுகிறது.

ஆகாச தத்துவத்திற்கு அடையாளமாக விஷ்ணுவின் கையில் நந்தகம் என்ற வாள் விளங்குகிறது. தமோகுணத்தைக் கேடயமாகவும், காலத்தைச் சார்ங்கம் என்ற வில்லாகவும், கர்மத்தை அம்பருத்தூணியாகவும் விஷ்ணு தரித்துள்ளார். திருக்கரங்களில் தாங்கியிருக்கும் முத்திரை அருள், அனுக்கிரகம் ஆகியவற்றைக் குறிக்கும் சின்னமாகும்.

வேதயஞ்ஞங்களின் வடிவமாக விளங்கும் மகாவிஷ்ணு கருடவாகனத்தில் பவனி வருகிருர். கருடவாகனம் மூன்று வேதங்களின் அடையாளமாகும். மேலான பதமாகிய வைகுண்டத்தின் அடையாளமான குடையின் கீழ்ப் பகவான் எழுந்தருளியுள்ளார். அவரது எட்டு வாயிற்காவலர்கள், ஸ்ரீமந் நாராயணனின் அஷ்டஐசுவரியம் எனப்படும் எட்டுவிதத் தெய்விகச்சக்திகளின் அடையாளங்களாவர். அவரது பணியாளர்களுள் தலைமையானவராகிய விஷ்வக்ஸேனர் என்பவர் பாஞ்சராத்திரம் போன்ற வைஷ்ணவ தந்திர நூல்களின் உருவமானவர்.

ஸ்ரீதேவி பெருமாளின் என்றும் பிரிக்க இயலாத சக்தியாகத் திகழ்கிருள். ☆

---

184 ஆம் பக்கத் தொடர்ச்சி

இதயம் கொண்டவர்களோ பல நல்லியல்புகள் நிரம்பப் பெற்றவர்கள். தயை, தாராள மனப்பான்மை, பிறர் துன்பம் கண்டு அனுதாபம் கொள்ளுதல், எல்லா உயிர்களிடமும் அன்பு முதலிய தெய்விகப் பண்புகள் அவர்களிடம் சோபிக்கும்.

இதயம் ஒன்றுதான் மிகவும் உயர்ந்த உணர்ச்சிகளை மக்களிடம் தோற்றுவிக்கிறது. அதுவே ஆத்மானுபூதி என்ற உலகிற்குள் அவர்களை அழைத்துச் செல்கிறது. புத்தியும் பகுத்தறிவும் (தர்க்க விசாரம்) ஆத்மானுபூதியாகிய உலகிற்குள் செல்ல அனுமதி பெரு.

நூலறிவு பெற்று வித்துவான் என்ற பெருமைக்கு உரியவன் ஒருவன் சுயநலம் நிறைந்தவனுகவும், கொடூரமானவனுகவும், தீமை செய்பவனுகவும் இருக்கக்கூடும். ஆனல் பெரிய இதயம் படைத்த ஒருவனே, தன் உயிருக்கே ஆபத்து நேர்வதாக இருந்தாலும் அத்தகைய கொடிய இயல்புடையவனுக இருப்பது ஒரு போதும் முடியாது.



# ஸ்ரீ மணிகர்ணிகாஷ்டகம்

தமிழாக்கம்: 'அண்ணு' சுப்ரமண்யம்

[காசி க்ஷேத்திரத்தில் விச்வநாதர் கோவிலுக்கும் அன்னபூரணியின் கோவிலுக்கும் அடுத்ததாக முக்கியத்துவம் வாய்ந்த இடங்களுள் 'மணிகர்ணிகை' என்ற இடமும் ஒன்று. 'மணிகர்ணிகா காட் (கட்டம்)' என்று அதை அழைக்கிறார்கள். கங்கைகரையில் அமைந்த மணிகர்ணிகை இந்த இதழின் அட்டைப் படமாகத் திகழ்கிறது.]

த்வத்தீரே மணிகர்ணிகே ஹரிஹரௌ ஸாயுஜ்ய முக்திப்ரதௌ
வாதம் தௌ குருத: பரஸ்பரமுபௌ ஜந்தோ: ப்ரயாணோத்ஸவே |
மத்ரூபோ மனுஜோऽயமஸ்து ஹரிணா ப்ரோக்த: பிவஸ் தத்க்ஷணாத்
தன்மத்த்யாத் ப்குலாஞ்ச்சனோ கருடக: பீதாம்பரோ நிர்க்கத: ||

மணிகர்ணிகா தேவியே! ஜீவனுடைய அந்திமப் பிரயாண உத்ஸவ காலத்தில் ஸாயுஜ்ய முக்தியளிப்பவர்களான ஹரியும் ஹரனும் உன் கரையில் ஒருவருடன் ஒருவர் வாதம் செய்து கொண்டிருக்கையில் சிவனிடம், 'இந்த மனிதன் என் ரூபத்தை அடைவான்' என்று ஹரி கூறவே, அதே நிமிஷத்தில் அந்த ஜீவனுடைய மத்தியிலிருந்து ப்ருகுவின் பாதத்தை அடையாள மாகத் தரிக்கும் மகாவிஷ்ணு பீதாம்பரமணிந்து கருடாருடராக வெளிப்போந்தார். || 1 ||

[பிருகுவின் பாத அடையாளம் :— அபராதத்தைப் பொறுத்து அருள் புரிவதில் எந்தத் தெய்வம் சிறந்தது என்று சோதித்து வருகையில், பிருகு மகரிஷி சயனித்திருந்த விஷ்ணுவைப் பாதத்தால் இடறினர் என்றும், அப்பொழுது விஷ்ணு எழுந்து, 'பாதம் நோகிறதா!' என்று கைகளால் மெதுவாக வருடினர் என்றும், அன்றுமுதல் அந்தப் பாத அடையாளத்தைக் கருணைக்கு அடையாளமாகத் தம் உடலில் தரிக்கிறார் என்பதும் புராண வரலாறு.]

இந்த்ராத்யாஸ் த்ரிதசா யதந்தி நியதம் போகக்ஷயே தே புன:
ஜாயாந்தே மனுஜாஸ் ததோऽபி பசவ: கீடா: பதங்காதய: |
யே மாதர்—மணிகர்ணிகே தவ ஜலே மஜ்ஜந்தி நிஷ்கல்மஷா:
ஸாயுஜ்யேऽபி கிரீட கௌஸதுபதரா நாராயணா: ஸ்யுர் நரா : ||

இந்திரன் முதலான தேவர்கள் எப்பொழுதும் மேலேற முயற்சிக்கிறார்கள். எனினும் அவர்கள் புண்ணியத்தை அனுபவித்து முடிந்தபின் மீண்டும் மனிதர்களாகவோ அல்லது மிருகங்களாகவோ புழு பூச்சிகளாகவோ பிறக்கிறார்கள். தாயே! மணிகர்ணிகையே! எவர்கள் உன்னுடைய தீர்த்தத்தில் முழுகுகிறார்களோ அந்த மனிதர்கள் மாசற்றவர்களாகி ஸாயுஜ்யப் பதவி எய்திக் கிரீடமும் கௌஸ்துபமும் அணிந்த நாராயண ஸ்வரூபத்தை அடைகின்றனர். || 2 ||

காசீ தன்யதமா விமுக்திநகரீ ஸாலங்க்ருதா கங்கயா
தத்ரேயம் மணிகர்ணிகா ஸுககரீ முக்திர் ஹி தத்கிங்கரீ |
ஸ்வர்லோகஸ் துலித: ஸஹைவ விபுதை: காச்யாம் ஸமம் ப்ரஹ்மணா
காசீ க்ஷோணிதலே ஸ்த்திதா குருதரா ஸ்வர்க்கோ லகு: கே கத: ||

கங்கையால் அலங்கரிக்கப்பெற்ற முக்திநகரமான காசீ மிகப் பெருமை வாய்ந்தது. அங்குள்ளது இன்பமளிக்கும் இந்த மணிகர்ணிகை. முக்தி என்ற பெண் அவளுடைய வேலைக்காரி போன்றவள். பிரம்மாவால் தேவர்களுடன் கூடிய ஸ்வர்க்கலோகம் காசியுடன் எடை போட்டுப் பார்க்கப்பட்டது. காசீ பளுவின் மிகுதியால் பூவுலகில் கீழே நின்றது; ஸ்வர்க்கம் எடைக்குறைவால் மேலே வானத்தில் போய்விட்டது. || 3 ||

கங்காதீரமனுத்தமம் ஹி ஸகலம் தத்ராபி காச்யுத்தமா
தஸ்யாம் ஸா மணிகர்ணிகோத்தமதமா யத்ரேச்வரோ முக்தித: |
தேவானாமபி துர்லபம் ஸ்தலமிதம் பாபௌகநாசக்ஷமம்
பூர்வாபார்ஜித-புண்யபுஞ்ஜ-கமனம் பூஜ்யைர் ஜனை: ப்ராப்யதே ||

கங்கைக் கரையிலுள்ள எல்லா இடமும் ஒப்புயர்வற்றது. அதிலும் காசி உத்தமமானது. அந்தக் காசியில் மணிகர்ணிகை உத்தமதமம் (மிக மிகச் சிறந்தது). அங்கு ஈச்வரன் முக்தியளிப்பவராக விளங்குகிறார். இந்த ஸ்தலம் தேவர்களாலும் அடைதற்கு அரிது. பாவக் கூட்டதை அறவே அழிக்க வல்லது. முற்பிறவிகளில் செய்த புண்ணியத்தின் தொகுதியால் அடையத் தக்கது. அது பூஜித்தற்கு உரிய புண்ணியவான்களால்தான் அடையப்படுகிறது. || 4 ||

து:காம்போதிநிமக்ன-ஜந்து-நிவஹாஸ் தேஷாம் கதம் நிஷ்க்ருதிர்-
ஜ்ஞாத்வைதத்தி விரிஞ்சினா விரசிதா வாராணஸீ சர்மதா |
லோகா: ஸ்வர்க்க முகாஸ் ததோऽபி லகவோ போகாந்தபாதப்ரதா:
காசீ முக்திபுரீ ஸதா சிவகரீ தர்மார்த்த காமோத்தரா ||

துன்பக்கடலில் மூழ்கியுள்ள ஜீவக்கூட்டங்களுக்கு எப்படி விடுதலை என்று கண்டறிந்து உயர்தலத்தை அளிக்கக் கூடிய இந்த வாரானஸி பிரம்மாவால் நிர்மாணம் செய்யப்பட்டது. ஸ்வர்க்கம் முதலிய மேலுலகங்கள் இருந்தாலும் அவை போகத்தின் முடிவில் வீழ்ச்சியைத் தருவனவாக இருப்பதனால் அற்பமானவை. காசியோ முக்தியளிக்கும் நகரமாகவும் தர்மார்த்த காமங்களைப் பூர்த்தி செய்வதாகவும் எப்பொழுதும் பரம மங்களத்தை அருள்வதாகவும் விளங்குகிறது. || 5 ||

ஏகோ வேணுதரோ தராதரதர: ஶ்ரீவத்ஸபூஷாதரோ
யோ ஹ்யேக: கில சங்கரோ விஷதரோ கங்காதரோ மாதவ: |
யே மாதர் மணிகார்ணிகே தவ ஜலே மஜ்ஜந்தி தே மானவா
ருத்ரா வா ஹரயோ பவந்தி பஹவஸ் தேஷாம் பஹுத்வம் கதம் ||

குழலைத் தாங்கியவரும், மலையைத் தாங்கியவரும், ஸ்ரீவத்ஸத்தை ஆபரணமாகக் கொண்டவரும் (ஹரியாகிய) ஒருவரே. (கழுத்தில்) விஷத்தை தரித்தவரும், (சிரசில்) கங்கையைத் தரித்தவரும், உமா வல்லபருமாகிய சங்கரரும் ஒருவரே. எந்த மனிதர்கள் மணிகர்ணிகையில் முழுகுகிறார்களோ, தாயே, அவர்கள் பலரும் ருத்திரர்களாகவோ, ஹரிகளாகவோ ஆகிறார்கள் என்றால் அவர்களுக்குப் பன்மை ஏற்பட்டது எங்ஙனம்? || 6 ||

த்வந்நிரே மரணம் து மங்கலகரம் தேவைரபி ச்லாக்யதே
சக்ரஸ் தம் மனுஜம் ஸஹஸ்ரநயனைர் த்ரஷ்டும் ஸதா தத்பர: |
ஆயாந்தம் ஸவிதா ஸஹஸ்ரகிரணை: ப்ரத்யுத்கதோSபூத் ஸதா
புண்யோSஸௌ வ்ருஷகோSதவா கருடக: கிம் மந்திரம் யாஸ்யதி ||

மணிகர்ணிகையே! உன்னுடைய கரையில் மரணமடைவது மங்களகரமானது. அது தேவர்களாலும் சிறப்பாகப் புகழப்படுகிறது. அங்கு மரணமடையும் அந்த மனிதன் செல்வதை ஆயிரங் கண்களுடன் பார்க்க, எப்பொழுதும் இந்திரன் ஆவல் கொண்டிருக்கிறான். விருஷபாரூடனாகவும் கருடாரூடனாகவும் செல்லும் இந்தப் புண்ணிய புருஷன் எந்தக் கோவிலுக்குச் செல்லுகிறான் என்று பார்க்க, சூரிய பகவான் ஆயிரம் கிரணங்களுடன் உதித்தெழுகிறான். || 7 ||

மத்த்யாஹ்னே மணிகர்ணிகா-ஸ்நபனஜம் புண்யம் ந வக்தும் க்ஷம:
ஸ்வியை-ரப்தசதைச்-சதுர்முகஸுரோ வேதார்த்ததீக்ஷாகுரு: |
யோகப்யாஸ பலேன சந்த்ரசிகரஸ் தத்புண்ய பாரங்கத:
த்வத்திரே ப்ரகரோதி ஸுப்தபுருஷம் நாராயணம் வா சிவம் ||

நடுப்பகலில் மணிகர்ணிகையில் ஸ்நானம் செய்வதனால் உண்டாகும் புண்ணியத்தின் பெருமையை வேதப்பொருளை உணர்த்தும் தீக்ஷா குருவாகிய நான்முகப் பிரம்மதேவரும் தமது நூறாண்டுகளாலும் கூறுவதற்கு வல்லமையுடையவராகார். மணிகர்ணிகையே! யோகாப்பியாஸ பலத்தாலும் அந்தப் புண்ணியத்தின் எல்லையில் இருப்பதனாலும் சந்திரசேகரப் பெருமான் உன் கரையில் (இரவில்) உறங்கும் புருஷனை நாராயணனாகவோ சிவனாகவோ ஆக்கிவிடுகிறார். || 8 ||

க்ருச்சரை : கோடிசதை: ஸ்வபாபநிதனம் யச்சாச்வமேதை: பலம்
தத் ஸர்வம் மணிகர்ணிகாஸ்நபனஜே புண்யே ப்ரவிஷ்டம் பவேத் |
ஸ்நாத்வா ஸ்தோத்ரமிதம் நர : படதி சேத் ஸம்ஸாரபாதோநிதிம்
தீர்த்தவா பல்வலவத் ப்ரயாதி ஸதனம் தேஜோ மயம் ப்ரஹ்மண : ||

நூறுகோடி கிருச்ர விரதங்களால் ஏற்படும் பாவ விமோசன பயனும் (நூறுகோடி) அச்வமேத யாகங்களால் ஏற்படும் புண்ணியப் பயனும் எது உண்டோ அதுவும் எல்லாம் மணிகர்ணிகையில் ஸ்நானம் செய்வதனால் ஏற்படும் புண்ணியத்தில் அடங்கிப்போகும். ஸ்நானம் செய்துவிட்டு இந்த ஸ்தோத்திரத்தை ஒரு மனிதன் படித்தால் ஒரு குட்டையைக் கடப்பதுபோல் எளிதாகப் பிறவிக்கடலைக் கடந்து ஒளி நிறைந்த பிரம்மலோகத்தை அடைவான். || 9 || ☆

---

தத்துவஞானத்தை ஆராய்வது ஒருவன் தன்னை மரணத்திற்குத் தயாரித்துக்கொள்வதாகும்.

—ஸிஸரோ

பேராசை பெருநஷ்டம். தேனீ தேன் குடிப்பதைப் பார்த்துவிட்டு ஒரு சாதாரண ஈயும் தேன் பிலிற்றும் மலரின்மீது உட்கார்ந்தது. அதன் சிறு இறகு தேனில் ஒட்டிக்கொண்டது. விடுபடுவதற்கு ஆனமட்டும் முயற்சி செய்தது. உருண்டது, புரண்டது. இதனால் அதன் சிறு உடலும் கால்களுங்கூட ஒட்டிக்கொண்டன. இவ்விதம் ஒரு துளி தேனுக்கு ஆசைப்பட்டு அது தன் உயிரை இழந்தது.

—கபீர்தாசர்





# தண்டபாணி பைரவர்

நரேந்திரன்

கந்தமாதன பர்வதத்தில் ராமபத்திரன் என்ற பெயருடைய தர்மாத்மா ஒருவர் வசித்து வந்தார். அவர் யக்ஷர்கள் கூட்டத்தைச் சேர்ந்தவர். ராமபத்திரன் இறைவனடி சேர்ந்தார். அவருக்குக் குணபத்திரன் என்ற ஒரு மகன் இருந்தான்.

குணபத்திரனுக்கு வயது ஆகிக் கொண்டிருந்தது-ஆனல் அவருக்கு மகப்பேறு வாய்க்கவில்லை. எனவே தமக்கு ஒரு மகன் இல்லையே என்ற கவலை அவரை வாட்டத் தொடங்கியது. அவர் புத்திரனை வேண்டிச் சிவபெருமானைக் குறித்துத் தவம் இருந்தார். நீண்ட காலத் தவத்தினல் சிவபெருமானின் மனம் கரைந்தது. அவரது திருவருளால் குணபத்திரனுக்கு ஒரு மகன் பிறந்தான். குழந்தைக்கு ஹரிகேசன் (அரிகேசன்) என்று பெயர் சூட்டி மகிழ்ந்தார்கள்.

சிவபெருமானது திருவருளால் பிறந்த அரிகேசன் பிறந்தது முதல் சிவபக்தனுகத் திகழ்ந்ததில் வியப்பேதுமில்லை. எட்டு வயதுச் சிறுவனுன அரிகேசன் விளையாடும்போதுகூடச் சிவபெருமானை மறந்தது கிடையாது.

அவன் மணலால் சிவலிங்கம் அமைத்துப் புல், இலை, மலர் ஆகியவற்றைத் திரட்டி மனம் தோய்ந்து சிவபூஜை செய்வான்-அத்தோடு நின்றுவிட மாட்டான். தன்னுடன் விளையாடும் சிறுவர்களுக்கு அரிகேசனே நாமகரணம் செய்வான். அந்தச் சிறுவர்களுக்கு அவர்களது பெற்றோர் என்ன பெயரிட்டார்கள் என்பதைப்பற்றியெல்லாம் அவன் சிந்தித்தது கிடையாது. அவனே அவர்களுக்குச் சந்திரசேகரன், ஸ்ரீகண்டன், நீலகண்டன் போன்ற சிவபெருமானது பெயர்களையே வைத்திருந்தான். அந்தப் பெயர்களாலேயே அவன் அவர்களைக் கூப்பிடுவான். அந்தப் பெயர் கொண்டுதான் அந்தச் சிறுவர்களை அறிவான். பையன்களின் சொந்தப் பெயர் சொன்னல் அவனுக்குத் தெரியாது.

அரிகேசன் இடைவிடாமல் சிவநாமத்தை ஜபித்தபடியே இருந்தான். சிவபெருமானின் கோவில்களுக்குச் செல்வதைத் தவிர வேறு எங்கும் போகவே அவனுக்குப் பிடிக்காது. வீட்டில் மகனைக் காணவில்லை என்ருல் பெற்ருேர் கண்டிப்பாக அவன் எங்காவது சிவன் கோவிலுக்குத்தான் சென்றிருப்பான் என்று தீர்மானமாக இருந்து விடுவார்கள். தேடமாட்டார்கள்; கவலையும்பட மாட்டார்கள்.

எங்கும் எதிலும் சிவபெருமானைக் காண்பது என்பது அரிகேசனுக்குப் பிறந்தது முதல் ஏற்பட்ட சுபாவமாயிற்று. தண்ணீர் குடிப்பதாக இருந்தாலும் அதைச் சிவபெருமானுக்கு அர்ப்பிக்காமல் அவன் சாப்பிட்டதே கிடையாது இயற்கைக் காட்சிகளில்கூட அவன் சிவபெருமானின் அம்சங்களையே கண்டு வந்தான். எங்கேயாவது நீர்ப்பிரவாகத்தையோ ஓடைகளையோ கண்டால் 'கங்காதரா, கங்காதரா' என்று சொல்லிக்கொண்டே தன்னை மறந்து விடுவான். மேகங்களின் கர்ஜனை கேட்டாலோ சிவஸ்துதியில் ஆழ்ந்துவிடுவான். கனவில் கூட அவன், ''பகவானே! மகேசுவரா! தாங்கள் எங்கே இருக்கிறீர்கள்? இரண்டு விநாடிகளாவது தாங்கள் என் அருகில் வந்து என்னைக் கடாக்ஷிக்கக் கூடாதா?'' என்று தான் வேண்டுவான்.

மகனின் சிவபக்தியைக் கண்ட தகப்பனுர் அவனை அருகில் அழைத்து அடிக்கடி குடும்ப வேலைகளில் ஈடுபடும்படி புத்திமதி கூறுவார். ''மகனே! நீ எப்போது பார்த்தாலும் சிவ பூஜையே செய்துகொண்டிருக்கக் கூடாது. நீ ஒரு யக்ஷன் என்பதை ஏன் மறந்தாய்? இந்த உலகத்திலுள்ள சொத்துக்கள் யாவும் யக்ஷர்களால்தான் காப்பற்றப்பட்டு வருகின்றன. யக்ஷர்களின் அரசரான வைஷ்ணவரை நீ

தெரிந்துகொள்ள வேண்டும். என்னோடு வா! நான் உன்னைக் குபேரனின் அனுக்கிரகத்தை அடையும்படிச் செய்கிறேன்'' என்று கேட்டுக் கொள்வார்.

தந்தை சொல்வதைக் கேட்ட அரிகேசன், ''அப்பா! எனக்கு அந்தக் குபேரனின் பெயரைக் கேட்டாலே சிவபெருமானின் நினைவுதான் வருகிறது. யக்ஷர்களின் அரசனான குபேரன் மகேசுவரனின் கிருபைக்கு ஆளானவன் அன்றோ! சிவபெருமானின் சிறந்த தொண்டன் அன்றோ! சிவபெருமானும் குபேரனைத் தமது தம்பியாகத்தானே கருதுகிறார்! குபேரனிடன் சென்றால் அவர் என்னைச் சிவபிரானிடம் சேர்ப்பித்துவிடுவார் அல்லவா?'' என்று கேட்டான்.

குணபத்திரன் எவ்வளவு எடுத்துச் சொல்லியும் அரிகேசனின் போக்கில் எள்ளளவும் மாறுதல் ஏற்படவில்லை. இவ்விதம் இருக்கும்போது ஒரு நாள் அரிகேசன் ஒருவரிடமும் ஒன்றும் சொல்லாமல் வீட்டைவிட்டுப் புறப்பட்டுவிட்டான். என்றாலும் அவன் சிறுவன்தானே! வீட்டைவிட்டு வந்தபிறகு அவனுக்கு என்ன செய்வ தெரியாமல் திக்பிரமை பிடித்துவிட்டது. கந்தமாதன மலையைச் சேர்ந்த அந்த மலைப்பகுதியில் வழி ஒன்றும் அவனுக்குத் தெரியவில்லை. 'எங்கே போவது? இந்தப் பாதை எங்கே கொண்டுபோய்ச் சேர்க்கும்?' என்று புரியவில்லை. மனம் ஒன்றுபட்ட நிலையில் பயந்துகொண்டே சிவபெருமானைக் கூப்பிடத் தொடங்கினான். ''தெய்வமே! சிவபெருமானே! நான் எங்கே செல்வேன்? எனக்கோ வழி தெரியவில்லையே! தாங்கள்தாம் என்னைத் தங்களுக்குப் பிடித்தமான காசி க்ஷேத்திரத்திற்கு அழைத்துச் செல்ல வேண்டும்'' என்று மனம் உருகிப் பிரார்த்தனை செய்தான்.

சிவனை அழைத்தபடியே அரிகேசன் கண்களை மூடிக்கொண்டான்; தன்னை மறந்தான். அவன் கண்களைத் திறந்து பார்த்தபோது அவன் கந்தமாதனத்திலும் இல்லை. அவன் இருந்தது மலைப்பகுதியும் கிடையாது. அவன் கண்கள் சென்ற இடமெல்லாம் மக்கள் நீராடி, நெற்றியிலும் உடலிலும் திருநீறுபூசி, கழுத்திலும் கையிலும் ருத்திராக்ஷ மாலையை அணிந்துகொண்டு வாய்நிறைய ''ஹர ஹர மஹாதேவா! சம்போ சங்கரா மகாதேவா! பாபா விச்வநாத்!'' என்று ஜபித்தபடி சென்றுகொண்டிருந்தார்கள். ஒருவர் மற்றவரைச் சந்திக்கும் போதும் 'சம்போ மகாதேவா!' என்று சொல்லிக் கொண்டார்கள். சிறுவனுக்குப் புரிந்துவிட்டது. அந்த இடம் சிவபெருமானுக்கு மிகவும் பிடித்தமான காசிக்ஷேத்திரம் என்றும், சிவபிரானது கிருபையால்தான் தான் அங்கு வந்தோம் என்பதும் அரிகேசனுக்குப் புலனாயின.

முக்திக்ஷேத்திரமான ஒப்பற்ற காசியில் மணிகர்ணிகா கட்டத்தின் அருகில் ஓர் இடத்தில் உட்கார்ந்துகொண்டு அரிகேசன் தவம் செய்யத் தொடங்கினான். ஆனந்த வனத்துக்கு நடுவில் அசோகமரத்தின் கீழே தன் தவக்கூடத்தை மாற்றிக்கொண்டான். மறுபடியும் தவத்தில் மூழ்கிவிட்டான். அவனுடைய உடலில் சதைகள் எல்லாம் போய், வெறும் எலும்புக்கூடுதான் மீதி நின்றது. உமாமகேசுவரர் விருடபாரூடராகத் தமது வாசஸ்தலமான காசியைச் சுற்றிப் பார்க்கப் புறப்பட்டார். அவர்கள் அரிகேசன் தவம் செய்துகொண்டிருந்த இடத்தை அடைந்தபோது ஜகன்மாதாவான பார்வதியின் பார்வை அந்தச் சிறுவன்மீது விழுந்தது. உடனே தேவி சிவபெருமானிடம், ''சுவாமி! தங்களுடைய இந்தப் பரம பக்தனைக் கண்டீர்களா? இவன் தங்களையே நினைந்து உருகி ஊண் உறக்கத்தையும் மறந்து சமாதியில் ஆழ்ந்துவிட்டான். தாங்கள் இவனை அனுக்கிரகிக்க வேண்டும்'' என்றாள்.

முக்கண்ணனான கங்காதரர் உடனே ரிஷபத்திலிருந்து கீழே இறங்கினார். இதனால் அரிகேசனின் சமாதிக்குப் பங்கம் ஏற்பட்டது. அவன் கண் விழித்தான். எதிரில் தான் இதயத்தில் எப்போதும் பூஜித்து வரும் சிவபெருமானைக் கண்டதும் ஆனந்த மிகுதியால் கட்டைபோல் உணர்ச்சியற்றுப்

போனான். பிறகு சுயநினைவு வரப் பெற்றதும் உமாபதியின் கால்களில் சாஷ்டாங்கமாக விழுந்து வணங்கினான். பிறகு எழுந்து தன் இரு கைகளையும் கூப்பிச் சிவனையும் உமா தேவியையும் துதிக்க ஆரம்பித்தான்.

சிறுவனின் பக்தியில் மகிழ்ந்த பரமேசுவரன் சிறுவனை நோக்கி, ''குழந்தாய்! நீ எனக்கு மிகவும் பிரியமானவன். இனி நீ என்னைவிட்டு எங்கும் செல்லத் தேவையில்லை. எனக்குப் பிடித்தமான இந்தப் பகுதிக்கு இனிமேல் நீ தான் தண்டநாயகன். என்னுடைய எல்லாக் கணங்களுக்கும் நீதான் தலைவன். அவர்களை ஆளுவதுதான் உன் வேலை. காசி க்ஷேத்திரத் திற்குள் நுழையும் அனைவருக்கும் அன்னம் அளிப்பவனும், உயிர் கொடுப்பவனும், ஞானம் அளிப்பவனும் (அன்னதாதா, பிராணதாதா, ஞானதாதா) இனி நீதான். நான் இதே காசியில் தாரக மந்திரத்தை உபதேசித்து மோட்சத்தை அளிக்கிறேன். இதற்கான ஏற்பாடுகளைச் செய்துகொண்டு இங்கேயே என் றென்றும் என்னுடன் வசிப்பாயாக'' என்று கூறி ஆசிர்வதித்தார்.

அரிகேசன் ஆனந்தக்கடலில் மூழ்கினான். வாய் திறவாமல் தலைகுனிந்து சிவபெருமான் சொல்வதைக் கேட்டுக்கொண்டிருந்தான். பகவான் மேலும் தொடர்ந்தார்: ''இந்த இடத்திற்கு நீ அதிகாரியாக இருப்பதால் மக்கள் உன்னை இனிமேல் 'தண்டபாணி பைரவன்' என்றுதான் அழைப்பார்கள். எவ ராவது காசிக்கு வந்து பாவச் செயலிலும் சிந்தனையிலும் ஈடுபட்டால் அவர்களின் மன திற்குள் நீ புகுந்து ஒருவிதமான எழுச்சியை உண்டுபண்ணு. அவர்கள் இந்த க்ஷேத்திரத்தில் மரணமடையும் தகுதியை இழந்து வேறு எங் காவது செல்லவேண்டும் என்ற எண்ணத்தைத் தோன்றும்படிச் செய்துவிடு. உடனே அவர்கள் இந்த இடத்தைவிட்டு வேறு எங்காவது சென்றுவிடுவார்கள்'' என்று கூறி, அரிகேசனை ஆசிர்வதித்து சங்கரர் உமா தேவியுடன் மறைந்துவிட்டார்.

அரிகேசன் அப்போதும் யக்ஷகுமாரன்தானே! அவனுடைய சரீரமோ தேவசரிரம்! சிவபெரு மானின் ஒப்பற்ற கிருபையில் காசி க்ஷேத்திரத் தின் தண்டநாயகனாகி அப்போது முதல் காசி யிலேயே வசிக்கத் தொடங்கினான்.

காசிக்குச் செல்லும் பக்தர்கள் அங்கே தரி சிக்க வேண்டிய மிகவும் முக்கியமான இடங் களுள், நாம் மேலே பார்த்த தண்டநாயகரின் ஆலயமும் ஒன்றாகும். தண்டபாணி மந்திர் என்று சொல்லப்படும் இந்த ஆலயம் பிரசித்தி பெற்ற காலபைரவர் ஆலயத்தின் அருகில் அமைந்துள்ளது. ✮

## துளசிதாசரின் வாக்கு

உலகத்தின் மீதுள்ள பற்றை நீக்கி, ராமரிடம் மட்டுமே பற்றுக்கொள்ள வேண்டும்.

முனிவர்களாலும் மற்றவர்களாலும் ஸ்ரீ ராமருக்கு அளிக்கப்பட்ட பழங்கள், சபரியின் 'அன்பு' என்ற அமுதில் ஊறிய பழங்களின் இனிமையை அடையவில்லை.

பக்தி மார்க்கத்திற்கு இன்னல்கள் இழைப்பவர்கள் யாராயினும் அவர்களை விலக்க வேண்டும். சீதாராமனுக்கு எவன் விரோதியோ அவன் நண்பனாயினும் எனக்கும் பகைவனே.

எந்த விதமான பக்தியை மேற்கொள்பவருக்கும் மோட்சத்தை அளிக்க வல்லவனும், அன்பே உருவெடுத்தவனுமான ஸ்ரீராமனிடம் பக்தி என்ற உணர்வு எவனுடைய உள்ளத்தில் தோன்றவில்லையோ, அவனைப் பெற்ற தாய், தாய்மை என்ற பெருமையைப் பூரணமாக அடையாதவளே. அத்தகையவள் சத்துவ குணம் நிறைந்த மகனை விரும்பாமல் வெறும் காம வாசனைக்காகத் தன் உடலைக் களங்கப்படுத்திக் கொண்டவள் ஆகிறாள்.

கண்களுக்கு மை தீட்டிக்கொள்வது அழகுக்காக மட்டுமல்ல, குளிர்ச்சிக்காகவும் ஆகும். அத்தகைய குளிர்ச்சி மைக்கு இல்லாவிட்டால், அதைத் தீட்டியதனால் கண்கள் கெட்டு விடுமேயன்றி பயன் ஏதும் ஏற்படாது. அது போலவே அஞ்சன வண்ணனை ராமனைக் காண்பதினால்மட்டும்தான் கண்களுக்குப் பெருமையே தவிர மாயையாகிய மை பூசி, உலகத்தில் ஏற்படும் விஷயபோகங்களைக் கண்டு களிப்பதனால் பயன் அல்ல. மேற்கூறிய கருத்துக்கள் துளசிதாசர் இயற்றிய 'வினய பத்ரிகா' என்ற நூலில் இடம் பெற்றுள்ளன.




சமீப காலத்தில் மிகவும் நீண்ட காலம் வாழ்ந்தவர் என்று அறிஞர்களால் ஒப்புக் கொள்ளப்பட்டவர் திரைலிங்க சுவாமிகள். சுமார் 300 ஆண்டுகள் அவர் வாழ்ந்தார் என்பதற்கு உரிய சான்றுகள் வரலாற்று ரீதியாகவே உண்டு. அவர் காசி க்ஷேத்திரத்தில் வாழ்ந்தார்.

ஒரு சமயம் திரைலிங்க சுவாமியைத் தரிசிக்கச் சென்ற ஒரு பக்தர், பல கேள்விகளை சுவாமிகளிடம் வினவினர். பக்தரின் கேள்விகளையும் சுவாமிகள் அவற்றுக்கு உடனுக்குடன் தெரிவித்த பதில்களையும் இங்கு தந்திருக்கிறோம். இதில், குரு என்பது திரைலிங்க சுவாமிகளையும் சீடர் என்பது பக்தரையும் குறிக்கும்.

* * *

சீடன் : உலகம் படைக்கப்படுவதற்கு முன் யார் இருந்தார்கள் ?

குரு : பஞ்சபூதங்களும் கடவுளும்தான்.

சீடன் : உலகையும் ஜீவராசிகளையும் படைத்தது யார் ?

குரு : கடவுள்.

சீடன் : சிருஷ்டிகளை (படைப்புக்களை) விருத்தி செய்வது யார் ?

குரு : பிரம்மா.

சீடன் : பிரம்மா யார் ?

குரு : ஈசுவரனின் சக்தி.

சீடன் : படைக்கப்பட்டவைகளைக் காப்பது யார் ?

குரு : விஷ்ணு அதாவது பகவான் நாராயணன்.

சீடன் : விஷ்ணு யார் ?

குரு : ஈசுவரனின் சக்தி.

சீடன் : சிருஷ்டியை அழிப்பது யார் ?

குரு : மகேசுவரன் அதாவது மகாதேவன்.

சீடன் : மகாதேவன் யார் ?

குரு : ஈசுவரனின் சக்தி.

சீடன் : பிரம்மாணி யார் ?

குரு : பிரம்மாவின் சக்தி.

சீடன் : லக்ஷ்மி யார் ?

குரு : விஷ்ணுவின் சக்தி.

சீடன் : துர்க்கை யார் ?

குரு : மகாதேவனின் சக்தி.

சீடன் : சம்சாரமாகிய கடலைக் கடக்கச் செய்பவர் யார் ?

குரு : ஈசுவரன்.

சீடன் : பந்தம் எனப்படுவது என்ன ?

குரு : விஷயங்களில் ஏற்படும் பற்றுத்தான்.

சீடன் : முக்தி என்று எதைக் கூறுகிறீர்கள் ?

குரு : விஷயங்களிடமுள்ள பற்றை நீக்கி ஈசனிடம் மனதைச் செலுத்துவது.

சீடன் : கோரமான நரகம் எனப்படுவது எது ?

குரு : நம்முடைய சரீரம்தான்.

சீடன் : சுவர்க்கம் எங்கே உள்ளது ?

குரு : 'நாம் உடல்' என்ற பொய்யான நம்பிக்கை அழிந்தால் இந்தப் பூமியே சுவர்க்கம் ஆகிவிடும்.

சீடன் : சம்சாரப் பற்று எப்போதுவிடும் ?

குரு : ஆத்மபோதம் ஏற்படும்போது.

சீடன் : என்ன செய்தால் முக்தி கிடைக்கும் ?

குரு : தத்துவஞானம் ஏற்பட்டால் முக்தி கிடைக்கும்.

சீடன் : நரகம் புகவேண்டிய காரணம் என்ன?

குரு : நாரி (அதாவது பெண்கள்).

சீடன் : சுவர்க்கம் செல்லவேண்டிய காரணம் என்ன ?

குரு : அஹிம்சை (கொல்லாமை).

சீடன்: மனிதனுக்கு எதிரிகள் யார் யார்?
குரு: அவனது ஐம்புலன்களே.
சீடன்: மனிதனின் தோழர்கள் யார்?
குரு: புலனடக்கமுடைமை (தனக்கு வசப்பட்ட புலன்கள்).

சீடன்: தரித்திரன் யார்?
குரு: எவன் மிகவும் கருமித்தனத்துடன் வாழ்கிறானோ அவனே பரம தரித்திரன்.
சீடன்: செல்வன் யார்?
குரு: எவன் எப்போதும் மனமகிழ்ச்சியுடன் வாழ்கிறானோ அவனே.
சீடன்: உயிருடன் இருந்தும் பிணமாகக் கருதப்படுபவன் யார்?
குரு: முயற்சியில்லாத மனிதன்.
சீடன்: மாயை எனப்படுவது எது?
குரு: அதிகமான அன்புதான்.
சீடன்: குருடன் யார்?
குரு: காம வசப்பட்டவன்.

சீடன்: இறப்பு எனப்படுவது என்ன?
குரு: இகழ்ச்சிதான் சாவு. மனிதன் அமரன்.
சீடன்: நிரந்திரமான நோய் எது?
குரு: சம்சாரம்.
சீடன்: அந்த வியாதிக்கு மருந்து என்ன?
குரு: பற்றற்று வாழ்வதுதான்.

சீடன்: மிகவும் முக்கியமான தீர்த்தம் எது?
குரு: ஒருவனுக்குத் தன்னுடைய பவித்திரமான மனம்.
சீடன்: விடப்பட வேண்டியது என்ன?
குரு: பொருள், துராசை.
சீடன்: கேட்க வேண்டியவை எவை?
குரு: குருவின் அருகிருந்து அவர் கூறும் வேதாந்தக் கருத்துக்கள்.
சீடன்: பிரம்மஞானம் அடையும் வழி யாது?
குரு: சத்சங்கம் (நல்லோர் சேர்க்கை).
சீடன்: சாது யார்?
குரு: எவனுக்கு ஆசையும் மோகமும் இல்லையோ அவனே.

சீடன்: ஜீவனுக்கு எரிச்சலை உண்டு பண்ணுவது எது?
குரு: கவலை (சிந்தனை).
சீடன்: முட்டாள் யார்?
குரு: அறிவில்லாத மனிதன்.
சீடன்: நாத்திகன் யார்?
குரு: கடவுள் இருப்பதை நம்ப மறுப்பவன் தான்.
சீடன்: பண்டிதன் யார்?
குரு: ஞானி.
சீடன்: தார்மிகன் யார்?
குரு: யதார்த்தமான பண்டிதன்தான்.

சீடன்: கடமை என்று ஒவ்வொருவரும் அவசியம் செய்ய வேண்டிய காரியம் என்ன?
குரு: கடவுளிடம் பக்தி.
சீடன்: கல்வி எனப்படுவது என்ன?
குரு: எதன் மூலம் பிரம்மஞானம் கிடைக்கிறதோ அதுவே.
சீடன்: லாபம் எனப்படுவது எது?
குரு: பிரம்மஞானத்தை அடைவது.

சீடன்: ஜகத்தை ஜயித்தவன் யார்?
குரு: எவன் தன் மனதை அடக்கியாள்கிறானோ அவனே.
சீடன்: விஷம் எனப்படுவது எது?
குரு: விஷயம் (லௌகிக இன்பங்களை நாடுவது).
சீடன்: துக்கமுடையவன் யார்?
குரு: விஷயப் பற்றுடையவன்.
சீடன்: சுகமுடையவன் யார்?
குரு: எவனுக்கும் எதைப் பற்றிய கவலையும் இல்லையோ அவனே!
சீடன்: 'தன்யன்' எனக்கருதப்படுபவன் யார்?
குரு: பரோபகாரி.
சீடன்: பூஜிக்கத்தக்கவர் (வணக்கத்திற்கு உரியவர்) யார்?
குரு: தத்துவ ஞானிகள்.

சீடன் : செய்ய வேண்டிய கர்மா என்ன?
குரு : தர்மத்தைச் சேர்ப்பது.
சீடன் : செய்யத் தகாத கர்மா எது?
குரு : ஸ்நேகமும் (நட்பும்) பாவமும்.
சீடன் : புத்திமான் யார்?
குரு : எவனைப் பெண்மணியால் வசியம் செய்ய முடியவில்லையோ அவனே!

சீடன் : உத்தமமான விரதம் என்ன?
குரு : சத்பாத்திரத்திற்குச் செய்யப்படும் தானம் (பாத்திரமறிந்து இடப்படும் ஐயம்).
சீடன் : தொடர்பு எனப்படுவது என்ன?
குரு : பெண்மணி.
சீடன் : எதைத் தெரிந்துகொள்வதில் மனிதர்கள் சாமர்த்திய மற்றவர்கள்?
குரு : பெண்ணின் மனமும் நடத்தையும்.

சீடன் : மிருகம் யார்?
குரு : மூர்க்கன்.
சீடன் : யாருடன் சேரக் கூடாது?
குரு : மூர்க்கன், பாவி, கபடன், கீழ்த்தரமானவன் ஆகியோருடன் சேரக் கூடாது.
சீடன் : சிறியவன் யார்?
குரு : இரப்பவன். பிறரிடம் கை நீட்டிக் கேட்பவன் சிறியவன்.

சீடன் : ஜன்மம் எடுத்தவன் என்று எவனைக் கூறலாம்?
குரு : எவனுக்கு மறுபிறவியில்லையோ அவனையே.
சீடன் : இறந்தவன் யார்?
குரு : எவனுக்குத் திரும்பவும் இறப்பு ஏற்படாதோ அவனே.
சீடன் : பெரியவன் யார்?
குரு : எவன் பிறரிடம் எதுவும் யாசிப்பதில்லையோ அவனே.
சீடன் : நம்பத்தக்கவன் யார்?
குரு : தத்துவஞானி.
சீடன் : நம்பத்தகாத ஆள் யார்?
குரு : பெண்.

சீடன் : எதைச் செய்வதனால் சோகம் ஏற்படாது?
குரு : தர்மமும் உபாசனையும் செய்வதனால்.
சீடன் : எவனுடைய ஆசை நிறைவேறுவதில்லை.
குரு : எதிரியின் ஆசை.
சீடன் : துக்கத்தின் வேர் எது?
குரு : மாயை.

சீடன் : எதைக் கொடுப்பது தக்கது?
குரு : அபயம் கொடுப்பது.
சீடன் : மனத்தின் அழிவது எது?
குரு : மோக்ஷத்தை அடைவது.
சீடன் : எங்கே எந்தவிதமன பயமும் இருக்காது.
குரு : முக்தியில்.
சீடன் : என்ன செய்தால் மரணபயம் ஏற்படாது?
குரு : ஈசுவர சிந்தனையில் மூழ்கியிருப்பதால்.
சீடன் : அழிவு எது?
குரு : கெட்ட வாசனை (கெட்ட விஷயங்களில் பற்று.)

சீடன் : எப்பொருள் பிறருக்குக் கொடுத்தாலும் வளர்கிறது?
குரு : கல்வி.
சீடன் : எப்பொருள் நாளுக்கு நாள் குறைவுபடுகிறது?
குரு : ஆயுள்.
சீடன் : என்றும் நிலைத்திருப்பது எது?
குரு : காலன் (எமன்).
சீடன் : எதைக் கண்டு பயப்பட வேண்டும்?
குரு : லோகாபவாதத்தைக் கண்டு (உலகம் பழிப்பதைக் கண்டு).

சீடன் : உண்மையான நண்பன் யார்?
குரு : எவன் ஆபத்து காலத்தில் உதவுகிறானே அவனே.
சீடன் : தாய் தந்தை யார்?
குரு : நம்மை வளர்ப்பவர்கள்.

சீடன் : எதை அறிந்துகொள்வதனால் வேறு எதையும் கற்றுக்கொள்ள வேண்டிய அவசியம் ஏற்படாது?

குரு : பூர்ணஞானஸ்வரூபமான பிரம்மத்தை அறிந்து கொள்வதால்.

சீடன் : எளிதில் அடைய முடியாதது எது?

குரு : சத்குருவும் ஆத்மஞானமும்.

சீடன் : நண்பர் யார்? சத்துரு யார்?

குரு : புத்திரன், பெண் முதலியோர். (மகன், மகள் போன்றோர்)

சீடன் : சஞ்சலமுடையது எது?

குரு : மனம், பணம், யௌவனம் ஆயுள்.

சீடன் : சிறந்த தானம் எது?

குரு : தத்துவஞானம்.

சீடன் : எத்தகைய காரியத்தைச் செய்யக் கூடாது?

குரு : பாவச் செயல்களைச் செய்யக்கூடாது.

சீடன் : எத்தகைய காரியத்தை உயிரைக் கொடுத்தேனும் அவசியம் செய்ய வேண்டும்?

குரு : ஈசுவர உபாசனை.

சீடன் : எது சிறந்த செயல்?

குரு : எந்தச் செயல் ஈசுவரனுக்குப் பிடித்தமானதோ அது.

சீடன் : எதை அடைய முயற்சி செய்யக் கூடாது?

குரு : சம்சாரத்திற்காக.

சீடன் : பகலும் இரவும் எதைப்பற்றிச் சிந்திக்க வேண்டும்?

குரு : சம்சாரத்தின் பொய்யான தன்மையையும், ஆத்மதத்துவத்தையும்.

சீடன் : கடவுள் இருக்கிறாரா இல்லையா என்று எவ்வாறு அறியலாம்?

குரு : நீ இருக்கிறாயா இல்லையா என்பதை எப்படி அறிவாயோ அது போல.

சீடன் : எதற்கு உருவம் கிடையாது? அதை எவ்வாறு அறிந்து கொள்ளலாம?

குரு : ஜீவன், மனம், புத்தி போன்றவை. அவை இருக்கின்றனவா இல்லையா என்பதை எவ்வாறு புரிந்து கொள்கிறாயோ இதேபோல்.

சீடன் : நமக்கு உயிர் இருக்கிறது. எனவே நம் விருப்பப்படி எல்லாவற்றையும் செய்துவிட முடிகிறது. எனவே நாம் 'நமது' என்பதை அறிந்துகொண்டிருக்கிறோம்.

குரு : எவன் தன்னை அறிகிறானோ அவன் கடவுளையும் அறிவான்.

சீடன் : நாம் எப்பொருளை நாமாக நேரில் கண்ணாரக் காணவில்லையோ அதைப் பற்றிய விஷயங்களை நம்ப முடியாது.

குரு : காற்று, நறுமணம் ஆகியவற்றுக்குக் கூட உருவம் கிடையாது. ஆனால் எதன் மூலம் அவைகளைப்பற்றி அறிந்துகொள்கிறாய்?

சீடன் : காற்று, நறுமணம் முதலியவை பற்றிய அறிவு அவற்றின் செயல்களால் ஏற்படுகிறது

குரு : நீயும் காற்றும் கடவுளின் செயல்களால் ஏற்பட்டவைதானே? இப்பொழுது சொல், கடவுள் இருக்கிறாரா இல்லையா என்று?

சீடன் : சரி, கடவுள் இருக்கிறார் என்பதை ஒப்புக்கொள்கிறேன். ஆனால் கடவுளை நான் ஏன் வணங்க வேண்டும்?

குரு : நீ உன் குழந்தைகளிடம் அன்பாகவும் பெற்றோர்களிடம் மரியாதையாகவும் ஏன் இருக்கிறாய்?

சீடன் : சிறுவர்களாக இருப்பவர்களிடம் அன்பு செய்வதும் பெரியோர்களிடம் மரியாதையாக இருப்பதும் உலக வழக்காகி விட்டது?

குரு : கடவுளிடம் பக்தியாக இருக்க வேண்டும். கண் இருக்கிறது; அதற்குப் பார்க்கும் சக்தி எங்கிருந்து கிடைக்கிறது? பார்ப்பதற்குப் பொருள்கள் இல்லையேல் கண்ணினால் என்ன பயன்? நீ உன் பாட்டனுக்குப் பாட்டனை பார்த்திருக்க மாட்டாய். ஆனால் அவரைப் பற்றி எவ்வாறு தெரிந்துகொள்கிறாய்? ஆகையினால் உருவம் இல்லாவிட்டாலுங்கூடக் கடவுள் இருப்பது நிச்சயத்திலும் நிச்சயம்.

தமிழாக்கம் : சரஸ்வதி



# பரிந்து பராமரித்த பராசக்தி

ரா. கணபதி

''உம்மாச்சி கண்ணைக் குத்திடும்,'' ''உம்மாச்சிட்டே சொல்லி மூக்கை அறுத்துடறேன் பார்'' என்றெல்லாம் குழந்தைகளை பயமுறுத்துவது வழக்கம். ஆனால் அதி பாலப் பருவத்திலேயே ரமணருக்கு உம்மாச்சி பயமுறுத்துகிற தெய்வமாயில்லை; ஏனெனில் அவர் முதன்முதலில் தெய்வத்தைத் தெரிந்துகொண்டதே அபய ஸ்வரூபமான, அன்பு வடிவான அன்னை என்பதாகத்தான். உம்மாச்சி உமா என்ற அம்மாவாகத்தான் ஆதியிலேயே அவரை அருள் வலையில் ஆட்படுத்திக் கொண்டாள்.

திருச்சுழியில் (வேங்கட) ரமணன் குழந்தையாயிருந்த காலம். வீட்டுப் பெரியவர்கள் குழந்தையைக் கடிந்து கொண்டார்கள்.

அப்புறம் பார்த்தால் குழந்தையைக் காணோம்.

பிற்பாடு எங்கிருந்து கிடைத்தான் தெரியுமோ?

அவ்வூர் சிவாலயத்தின் அம்மன் ஸந்நிதியில்தான்!

''உம்மாச்சிகிட்டே சொல்லி'' அப்பா அம்மாவை மிரட்டச் சொல்லலாம் என்று குழந்தை போனானே, அல்லது அவர்கள் கண்டித்ததன் நோவு ஆற அவளே கதி என்று போனானே, நேரே அம்பிகையிடம் சென்று அவள் பக்கத்தில் நெடுநேரம் அமர்ந்துவிட்டான். ஸஹாயவல்லி என்றும் துணைமாலையம்மன் என்றும் பெயர் பெற்ற அவளே ஸஹாயம் என்று அந்தச் சின்ன வயசிலேயே ரமணருக்கு ஏற்பட்ட உறுதியை அவளும் என்றென்றும், அன்றன்றும் நிச்சயப்படுத்திக் கொண்டே இருந்தாள்.

அவள் செய்த முதல் பேருதவி அப்போது அந்தப் பிள்ளையின் பிஞ்சு நெஞ்சை ஆற்றியது மட்டுமல்ல. அதிலே அச்சமயம் உண்டான அழுகைக்கும் ரோஷத்துக்கும் காரணமான மானுபிமான உணர்வையே அவள் அகழ்ந்தெடுத்து அகற்றிவிட்டாள்!

அவரது பதினேழாம் வயதில் அண்ணன் ஏளனமாக இடித்துரைத்தன் மீதே அவர் வீட்டை விட்டுப் புறப்பட்டதாக அறிந்தவர்கள், அப்போதும் தன்மான ரோஷ உணர்வுதான் அவரை இயக்குவித்தது என்று எண்ணலாம். ஆனால் அது சரியில்லை.

பள்ளிநாளிலிருந்தே ரமணர் ஜடபரதர் போல்தான் இருந்தார். நல்ல பலிஷ்டரான அவர் தூக்கம் போன்ற நாம் அறியாத ஏதோ ஒரு நிலையில் கிடக்க, அப்போது மற்றச் சிறுவர் அவரை நையப் புடைத்ததை அவர் அறிந்திருந்தும் கூட, வெளியுணர்வு முற்றும் மீண்ட பிறகு அவர்களைப் பழிக்குப் பழி வாங்காமல் வெறுமேதான் இருப்பார். அந்த அளவுக்கு மான ரோஷ உணர்வுகள் நீங்கிவிட்டன.

இந்த நிலைக்கும் மேம்பட்ட அனுபவங்களை எய்தியபின்தான், பதினேழாம் வயதில்-Sweet seventeen என்பார்களே, அந்த மதுரப் பதினேழில்தான் அருணாசல ஆத்மநாதன் அவரை அவளாக்கி மணந்து கொண்டான்! பெயின் (Bain) என்பவரின் ஆங்கில இலக்கண நூலில் இம்போஸிஷன் எழுத முடியாமல் நிஷ்டைக்கு நழுவினான். கல்லூரி மாணவனான அண்ணன், ''இப்படியெல்லாம் இருக்கிறவனுக்கு இதெல்லாம் என்னத்துக்கு?'' என்று ஏளனமாகக் குத்திக் காட்டிப்பேசினான். 'சாமியார்மாதிரி இருக்கிறவனுக்கு ஸ்கூல் என்ன, வீடு என்ன?' என்ற அர்த்தத்தில் இப்படிச் சொன்னான். அதோடு ரமணன் வீட்டை விட்டு, பள்ளியை விட்டு, ஊரை விட்டே புறப்பட்டுவிட்டான்.

புறப்பட்டது வாஸ்தவம். ஆனால் அண்ணன் சொன்னதில் ரோஷம் கொண்டு மான உணர்வின் மேல் அவர் கிளம்பவில்லை. ''ஆம்,

அவன் சொல்வது வாஸ்தவம்தானே? ஏதாவது ஒரு வழியில்தானே தீரத் தெளிய நிலைப் படுத்திக் கொள்ள வேண்டும்? இதென்ன, ஆற்றில் ஒரு கால் சேற்றில் ஒரு கால் என்று?'' என்பதாக, அண்ணன் தன் கண்ணைத் திறந்து விட்டானே என்று அவன் கூறியதை மதித்து, தர்ம நியாய உணர்விலேதான் அவன் புறப்பட்டான்.

ஆக, ஆதியிலே அவர் அம்பாளை அடுத்த தற்கு அவள் அபார கிருபையை—எளிதில் பெற முடியாத மானாபிமான நீக்கத்தை—அளித்துவிட்டாள்.

அது மட்டுமில்லை.

தன்னையே தஞ்சம் கொண்டோருக்கு யோக க்ஷேமம் வஹிக்கும் பொறுப்பையும் ரமணர் விஷயத்தில் அதியற்புதமாக அவள் காட்டினாள்.

ஆத்மஞானிக்கு யோகம் (பொருட்களை ஈட்டு தல்) என்ன, க்ஷேமம் (ஈட்டியதைக் காத்தல்) என்ன என்று தோன்றலாம். அப்படியில்லை. அவர்களுக்கும் சரீர யாத்திரை நடக்கச் சில அத்யாவசியத் தேவைகள் பூர்த்தி செய்யப்பட வேண்டியுள்ளன. என்னதான் ஞானியானாலும் அவர்களும் பராசக்தியின் லீலைக்கு உட்பட்ட வர்கள்தாமே? இந்த விளையாட்டில் அவர்களையும் அவள் விளையாட வைக்கும்போது அவர்களுக் குப் பொம்மைகள், சொப்புக்கள் வேண்டாமா? அதையெல்லாம் பார்த்துப் பார்த்துக் கொடுத் தாள் பரதேவதை நம் பகவானுக்கு.

உலகு அடிபட்டுப் போன நிலையில் நிர்குண ப்ரஹ்மம் என்று பேசப்படுவதே, உலகம் என்ற அற்புத இயக்கத்தை நிர்வஹிப்பதாகக் கருதப்படுகையில் சகுண ப்ரஹ்மம் என்றும் ஈச்வரன் என்றும் வேதாந்த சாஸ்திரங்களில் கூறப்படுகிறது. ஆனால் சாக்த தந்திரங்கள் கூறும்படி இந்த ஈச்வரனையே சிவமாம் நிர்குணமாக்கி, பராசக்தியான அன்னையைப் பிரபஞ்ச நிர்வாஹப் பேராற்றலாகக் கொள் வதே நடைமுறையில் அதிகம் உள்ளது. எதனாலோ, பரமஹம்ஸ ராமகிருஷ்ணர், பகவத்பாத சங்கரர் முதலியோரும்கூட உலக இயக்கசக்தி என்பதை மிகப் பெரும்பாலும் இவ்வாறு தேவியாகத்தான் அனுபவித்திருக் கின்றனர். அருணாசலேச்வரனாகவே இச்சக்தி யைப் பெரும்பாலும் உணர்ந்த ரமணர்கூட அன்னை வடிவிலும் இதனை ஆழ அமிழ அனுபவித்திருக்கிறார் என்று காட்டத்தான் முதலிலேயே அவர் திருச்சுழியில் (திருமேனி நாதர் என்னும் பூமி நாதன் ஸந்நிதியில் அடைக்கலம் புகாமல்) ஸஹாயவல்லியை சரண் கொண்டதைச் சொன்னோம்.

* * *

அன்னைத் தத்வ ஈர்ப்பை mother fixation என்று மனோதத்வத்தில் சொல்கிறார்கள். அதிலே ஆத்மிகமாக ஒப்புக்கொள்ள முடியாத அபத்தங்கள், அசுத்தங்கள் இருந்தாலும், இந்தியர்களுக்கு—பாரதத்தின் தத்துவ ஞானி களுக்கும்கூட—mother fixation அதிகம்தான் என்கிற கூற்றை ஒப்புக்கொள்ளத்தான் வேண்டும். எல்லா மனச்சார்புகளையும் அறவே நீக்கப் பணிக்கும் ஸ்ரீ ஜே. கிருஷ்ணமூர்த்திக் கும்கூட நீண்டகாலம் இந்தத் தாய்மை ஈர்ப்பு இருந்திருப்பது அவரது சரிதையைப் படிக்கையில் தெளிவாக வெளியாகிறது. மஹான்கள் விஷயத்தில் mother fixation என்பது பெற்ற தாயில் தொடங்கி, ஜன்ம ஜன்மத்துக்கும் ''தொடர்ந்து வரும் தாயும்'' ஜன்மமே இல்லாது செய்யும் தாயுமான ஜகன்மாதாவில் நிறைகிறது.

குருமஹராஜுக்கு அன்னை சந்திரமணியிடம் இருந்த பரிவு, நமக்கு அன்னையாம் சாரதை யிடம் அவருக்கு இருந்த கனிவு, பவதாரிணிப் பரமேச்வரியிடம் அவரது பாரித்த பூரித்த பக்தி என்ற மூன்று விதங்களில் தாய்மையீர்ப்பு வெளியாகிறது.

ரமணருக்குப் பாலப் பருவத்தில் பிறந்த அன்னை ஆகர்ஷணம் நாளடைவில் முளைத்து, கிளைத்து, தளிர்த்து, பூத்து, காய்த்து, கனிந்தே வந்திருக்கிறது.

பார்வதி, கங்கை என்ற இரு தாயரைப் பெற்றதால் கணபதியை 'த்வைமாதுரன்' என்பார்கள். க்ருத்திகா தேவியர் அறுவர், ஷஷ்டிப் பெண்டிர் அறுவர், அறுமுக சிவ-சக்தி இவர்களால் பாலனாக வளர்க்கப்பட்ட

ஷண்முகன் ஷாண்மாதுரன் எனப்படுகிறான். ஸ்ரீ ராமகிருஷ்ணர் மேலே சொன்னாற்போல் மூன்று அன்னையரை உடையவர். ரமணருக்கு முதலில் பெற்றதாய் அழகம்மை, அப்புறம் திருச்சுழித் துணைமாலையம்மன், பின் மதுராபுரி மஹா மீனாம்பிகை, அடுத்து அருணாசல அபீதகுசை என்று நான்கு தாயர். வயதிலும், ஞானத்திலும் முதிர்ந்த முதிர்ச்சி அடைந்த தசையிலும் பகவான் ''அம்மா,'' ''அம்மா'' என்ற எளிய வார்த்தையை இந்த நால்வரைக் குறித்துச் சொல்கையில் அவருக்கும் சரி, கேட்போருக்கும் சரி கண் மங்கும், நெஞ்சில் பிரேமை கனமாக கனக்கும்.

* * *

வீட்டிலே திட்டினார்கள் என்று ஸஹாய வல்லியிடம் போனார். அப்புறம் வீட்டை விட்டே ஓட்டினாள் மதுரை ராணி.

அண்ணன் வார்த்தையின் மூலம் கிளப்பி விட்ட பராசக்தி அந்தக் கணத்திலிருந்து எத்தனை கண்ணும் கருத்துமாகக் குழந்தைக்கு யோக க்ஷேமம் வஹித்தாள்? நடுவே கொஞ்சம் ஏறுமாறு, ஏடாகூடம் செய்து குழந்தையைக் கொஞ்சம் குழப்பியும் தவிக்க விட்டும் பார்த்துப் பின்னர் ஸம்ரக்ஷணையைக் கூட்டிச் செய்தாள். ரக்ஷணையின் பெருமையைத் தூக்கிக் காட்டவே அங்கங்கே சற்று சோதித்தாள்.

முதலில் பாருங்கள்: அண்ணன் இடித்து ரைத்ததும் ரமணருக்கு அதன் நியாயம் மனத்தில் ஆழப் பதிந்து அவர் தம்மை இனம் புரியாது கவர்ந்து விட்ட அருணாசலத்துக்குப் புறப்பட அப்போதே ஆயத்தமானார். அண்ணனிடம், பள்ளியில் எலெக்ட்ரிஸிடி பற்றி ஸ்பெஷல் கிளாஸ் என்று ஒரு போடு போட்டுவிட்டுக் கிளம்பினார். அது எப்பேர்ப்பட்ட எலெக்ட்ரிஸிடி, அது எத்தனை அதி ஸ்பெஷல் க்ளாஸ் நடத்தியது என்பதைத்தான் பிற்பாடு உலகம் பகவான் ரமணர் என்ற பரப்ரஹ்ம ஸ்வரூபத்திடம் ஊகித்துணர்ந்து கொண்டது! ''வித்யுல் லேகேவ பாஸ்வரா'' என்றும், ''யதேதத் வித்யுதோ வ்யத்யுததா'' என்றும் மின்சாரம் பிறக்கும் மின்னலாகவே ஆத்ம ஸாக்ஷாத்காரம் உபநிஷதங்களில் கூறப்படுவதற்கேற்ப வேங்கடரமணன் மெய்யையே பொய் போலப் பகருமாறு செய்திருக்கிறான்!

இந்த வஞ்சமில்லாப் பொய்க்கு உடனே வெகுமானமும் செய்தான்! ''சரி, அப்படியானால் என் காலேஜ் ஃபீஸையும் போகும்போது கட்டிவிடு'' என்று அண்ணன் கூறினான்.

அருணாசலம் போவதற்கே ஐந்து ரூபாயை இப்படிச் சுளையாக நம் பகவானுக்குக் கொடுத்தாள் யோக க்ஷேம வாஹகி!

வெகுமானத்திலேயே சிறு அபராதமும் சேர்த்தாள். என்ன இருந்தாலும் சற்று பொய் கலந்துவிட்டதே என்பதாலும், பணத்தை பீஸுக்கு இல்லாமல் ரயில் செலவுக்கு பயன் செய்துகொள்வது நியாயமல்லவே என்பதாலும் சற்று சோதித்தாள். திருவண்ணாமலையே ரயில் ஸ்டேஷன் உள்ள ஊர் என்று தெரியாத வேங்கடரமணன் திண்டிவனத்துக்கு டிக்கெட் எடுக்குமாறு செய்து, விழுப்புரத்திலேயே திருவண்ணாமலைக்கு அவன் செல்வதற்குள் பலவிதச் சில்லறைத் தொந்தரவுகளைக் கொடுத்தாள்.

பொய்யிலும் அத்யாவசியத்துக்கு இம்மிகூட மேலே போகவில்லை வேங்கடரமணன். திண்டிவனத்துக்கு மதுரையிலிருந்து இரண்டு ரூபாய் பதின்மூன்றணா ரயில்கூலி என்று தெரிந்து கொண்டவன், ஐந்து ரூபாயில் மூன்று ரூபாய் மட்டுமே தான் எடுத்துக்கொண்டு மீதம் இரண்டு ரூபாயை வீட்டிலிருந்து விடை பெற்றுக்கொண்டு எழுதிய கடிதத்தோடு வைத்துவிட்டான். திருவண்ணாமலைக்கு டிக்கெட் சரியாக மூன்று ரூபாய்தான் என்பதில் அம்பாளின் ஹாஸ்யம், அல்லது ஹாஸ்யப் படிப்பினை இருக்கிறது!

வேங்கடரமணன் வீட்டிலிருந்து புறப்பட்ட போது நண்பகல். சரியாக அதே சமயம்தான் திண்டிவனம் ரயில் வரும். வீட்டிலிருந்து ஒரு மைலுக்கு மேலிருந்த ஸ்டேஷனுக்கு வேகு வேகு என்று ஓடினான் பிள்ளையாண்டான். ஆனால் அதற்கு அவசியமேயில்லை எனும்படியாக, அம்மாக்காரி அவனுடைய படபடப்பும்

அடங்கிச் சிறிது போதுக்குப் பின்னரே ரயில் வருமாறு அதைத் தாமதப்படுத்தியிருந்தாள்!

ஸஹாயவல்லியாக ஆதியில் ஆகர்ஷித்தவள் மார்க்க ஸஹாயம் தர ஒரு மௌல்வியை அதே ரயில்பெட்டியில் ஏற்றுவித்தாள். மௌன மூர்த்தியாய் வந்த வேங்கடரமணனின் வாயைப் பிடுங்கி அந்த மௌல்வி அவன் போக வேண்டிய இடத்தைத் தெரிந்துகொண்டு அவன் விழுப்புரத்தில் இறங்கித் திருவண்ணமலைக்கு வேறு ரயில் மாறவேண்டும் என்று தெரிவித்தார். இல்லாவிடில் அவன் எங்கெங்கோ சுற்றியிருப்பான்.

முன்றே அணுக் கையிருப்பு வைத்திருந்த ரமணன் திருச்சியில் அரையணுவுக்கு வாங்கிய இரண்டு பேரிக்காய்களில் ஒன்றை அவன் ஒரு வாய் தின்றவுடனேயே அவனுடைய வயிறு திம்மென்று நிறைந்ததே, அதுவும் அவள் வஹித்த யோகக்ஷேம மகிமைதான். இல்லாவிடில், முதல்நாள் வரையில் திண்டியாக அதிகாலையில் பழையதும், முற்பகல் முழுதாகப் புதுச்சாப்பாடும், பிற்பகல் டிஃபனும், இரவு மறுபடி முழுச் சாப்பாடும் கொண்டவனுக்கு கால் பேரிக்காயில் எப்படிப் பசி அடங்கும்?

மறுநாள் பகல் விழுப்புரத்தில் இரண்டரை அணுவுடன் விடப்பட்ட பையனுக்கு ஹோட்டல்காரர் இலவசமாக அன்னமிட்டதில் அன்னையின் கவனிப்புத் தொடர்ந்தது.

கர்மா தீருவதற்கோ, அல்லது உறுதி உள்ளத்தை எடுத்துக்காட்டவோ பராசக்தி இடையிடையே சோதனைகளும் செய்ததில், வேங்கடரமணன் விழுப்புரத்திலிருந்து அருணை சேரு முன் அநாவசியமாகத் திண்டாடவும் நேர்ந்தது. திருக்கோவலூரைச் சேர்ந்த கீழூரை அவன் பசியும் பட்டினியுமாக இரவு வேளையில் அடைந்தான். அங்கிருந்த வீரட்டேச்வரர் ஆலய குருக்கள் நம் இளைஞனுக்கு பிரஸாத உணவு தர மறுத்துவிட்டார். நிழலருமை வெயிலிலேயே தெரிவதுபோல் இங்கே. பராசக்தியின் கவனிப்பு துள்ளி வந்தது. ஆலய மேளக்காரர் தன் பகுதி பட்டைச் சாதத்தை அப்படியே வேங்கடரமணனுக்குக் கொடுத்துவிடும்படிச் செய்து அவன் வயிற்றை நிரப்பினாள்!

கீழூரில் அவன் மேற்கொண்டு பயணம் தொடர வசதியாகக் காதுக் கடுக்கனை நாலு ரூபாய்க்கு அடகு வைத்தான். அடகுபிடித்த முத்துகிருஷ்ண பாகவதரும், அவர் வீட்டுப் பெண்டும் அவனுக்கு வயிருர உணவு படைத்தது மட்டுமின்றி, கிருஷ்ண ஜயந்தி பூஜை ஆகுமுன்பே கோகுலாஷ்டமி பக்ஷணங்களைப் பொட்டலமாகக் கட்டி அவனுக்குக் கொடுத்தார்கள். அவள் தூண்டுவித்தாலொழிய எண்பத்து நாலாண்டுகளுக்கு முன் ஓர் ஆசார அந்தணக் குடும்பத்தினர் இப்படிச் செய்திருக்க முடியுமா? ☆

## ஸ்ரீமத் பகவத்கீதை ரிகார்டு வெளியீடு

சென்னை ஸ்ரீ ராமகிருஷ்ண மடத்தில், ஸ்ரீமத் பகவத்கீதையில் உள்ள இரண்டாவது, மூன்றாவது அத்தியாயங்களுக்கு உரிய ஏழு எல். பி. ரிகார்டுகள் 21—5—1980 புதன் மாலை 6-30 மணிக்கு வெளியிடப் பெற்றன.

ஸ்ரீமத் சுவாமி ரங்கநாதானந்தஜி மகராஜ் அவர்களின் கீதை உரைகளைக் கொண்ட H. M. V. கம்பெனியின் இந்த ரிகார்டுகளில், உரை துவங்குவதற்கு முன்னால், டாக்டர் எம். பாலமுரளிகிருஷ்ண அவர்கள் கீதைச் சுலோகங்களை இனிமையாகப் பாடியுள்ளார்.

21—5—80 ஆம் நாள் நடைபெற்ற இந்த ரிகார்டு வெளியீட்டு விழாவில் ஸ்ரீமத் சுவாமி தபஸ்யானந்தர் வரவேற்புக் கூறினர். அடுத்து, தமிழக ஆளுநர் மேதகு ஸ்ரீபிரபுதாஸ் பட்வாரி அவர்கள் தமது சொற்பொழிவுக்குப் பிறகு கீதையின் எல். பி. ரிகார்டுகளை வெளியிட்டார். தமிழக ஆளுநரிடமிருந்து ரிகார்டுகளின் முதல் பிரதியை மேஜர் ஜெனரல் எஸ். பி. மகாதேவன் பெற்றுக்கொண்டார்.

ஸ்ரீ ராமகிருஷ்ண மடத்தின் வெளியிடான, ஸ்ரீமத் சுவாமி ரங்கநாதானந்தரின் Divine Grace என்ற நூலையும் தமிழக ஆளுநர் வெளியிட்டார். அதன் முதல் பிரதியை தமிழக ஆளுநரிடமிருந்து எம். பாலமுரளிகிருஷ்ண பெற்றுக்கொண்டார்.



# ஸ்ரீ ராமகிருஷ்ண மடம், சென்னை-600 004
## 1980 ஜூன் மாத நிகழ்ச்சிகள்



சத்சங்கம் : ஞாயிறுதோறும் (மாலை 4 மணி முதல் 4-30 மணி வரை)

ஸ்ரீ விஷ்ணு ஸகஸ்ரநாம பாராயணம் (1, 15, 29-6-80)

ஸ்ரீ லலிதா ஸகஸ்ரநாம பாராயணம் (8-6-80 & 22-6-80)

4-30 மணி முதல் 5-30 மணி வரை—சொற்பொழிவு (தமிழ்)

| | | |
|---|---|---|
| 1—6—80 | 1. | பாகவதம்-திரு 'அண்ணு' சுப்ரமண்யம் |
| 8—6—80 | 2. | ஸ்ரீ விஷ்ணு ஸகஸ்ரநாமம்-திரு வி. ஆர். கல்யாணசுந்தர சாஸ்திரிகள் |
| 15—5—80 | 3. | ஸ்ரீ லலிதா ஸகஸ்ரநாமம்-திரு வி. எஸ். வி. குருஸ்வாமி சாஸ்திரிகள் |
| 22—6—80 | 4. | ஸ்ரீ ஆஞ்சனேயர் - ஆர். கோதண்டராமன் |
| 29—6—80 | 5. | வால்மீகி ராமாயணம்-டாகடர் என். விழிநாதன் |

மாலை 5-35 மணி முதல் 6-30 மணி வரை சுவாமி கபீரானந்தர் அவர்கள் ஸ்ரீமத்பகவத்கீதை என்ற தலைப்பில் ஜூன் 1, 8, 15, 22, 29 ஆகிய தேதிகளில் ஆங்கிலத்தில் சொற்பொழிவு நிகழ்த்துவார்கள்.

வார நாட்களில் நடைபெறும் சொற்பொழிவுகள் (மாலை 5-45 மணிக்கு)

| | | |
|---|---|---|
| 1. | திங்கள் | ஸ்ரீ ராமகிருஷ்ணரின் உபதேசங்கள்—சுவாமி அமிர்தானந்தர் |
| 2. | செவ்வாய் | பக்தியோகம்—சுவாமி கபீரானந்தர் |
| 3. | புதன் | பஜனை |
| 4. | வியாழன் | விவேக சூடாமணி-திரு 'அண்ணு' சுப்ரமண்யம் |
| 5. | வெள்ளி | இராமாயணம்—சுவாமி கமலாத்மானந்தர் |
| 6. | சனிக்கிழமை | (7—6—80 மட்டும்) அத்யாத்ம ராமாயணம் —ஜஸ்டிஸ் டி. ராமகிருஷ்ணன், ஐ.சி.எஸ். (ரிடையர்டு) |
| 7. | சனிக்கிழமை | (14 21—6—80 மட்டும்) நான் யார்?—திரு சி.எஸ். பிள்ளை |

வேறு சில நிகழ்ச்சிகள் :

9—6—80 & 24—6—80 ஆகிய ஏகாதசி தினங்களில் மாலை வழிபாட்டிற்குப் பிறகு ஸ்ரீ ராமநாம சங்கீர்த்தனம் நடைபெறும்.

8—6—80 மாலை 5-30 மணிக்கு ஸ்ரீ ராமகிருஷ்ணரின் உபதேசங்கள் என்ற தலைப்பில் சுவாமி கீர்த்திதானந்தர் அவர்கள் உரை நிகழ்த்துவார்கள். இடம்: 7, கெல்லிஸ் ரோடு, கீழ்ப்பாக்கம்.

6, 13, 20, 27 ஆகிய தேதிகளில் மாலை 6-15 மணிக்கு சுவாமி ராகவேசானந்தர் அவர்கள் ஸ்ரீ விஷ்ணு ஸகஸ்ரநாம பாராயணமும், பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ணர் என்ற தலைப்பில் சொற்பொழிவும் நிகழ்த்துவார்கள். இடம்: 18, 9-வது லேன், சாஸ்திரி நகர்.

அனைவரையும் அனைத்து நிகழ்ச்சிகளிலும் கலந்துகொள்ளுமாறு அன்புடன் அழைக்கிறோம்.

தொலைபேசி : 71231

தலைவர்,

ஸ்ரீ ராமகிருஷ்ண மடம், சென்னை-60 0004.

வெளிநாடுகளுக்கு ஆண்டுச் சந்தா விவரம்: இலங்கை (இந்திய நாணய மதிப்பில்)—ரூ. 14 யு.எஸ்.ஏ. $ 5 பிற நாடுகள் £ 2.5 ஆயுள் சந்தா: யு. எஸ். ஏ. —$ 70 பிற நாடுகள் £ 35.

தனிப் பிரதி உள்நாடு ரூ. 1-20